கடவுள் துணை.

# சத்தப்பிரகரணம்.



அருணாசலசுவாமிகளால்

நூதன உரைசெய்யப்பட்டதை

---

சென்னை-இட்டா

பார்த்தசாரதிநாயுடு

அவர்களது

ஸ்ரீபத்மநாபவிலாச அச்சுக்கூடத்திற்

பதிப்பிக்கப்பட்டது.

1906.

சென்னை ஆச்சாரப்பன் தெரு நெ. 84.

ஓம்

ஸ்ரீசற்குருவோம்.

# சத்தப்பிரகரணம்.

## குருஸ்துதி.

బ్రహ్మానందం పరసుసుఖదం కేవలంజ్ఞానమూర్తిం । వి
శ్వాతీతం గగనసదృశం తత్వమస్యాది లక్ష్యం । ఏకంనిత్యం
విమలమచలం సర్వదాసాక్షిభూతం । భావాతీతం త్రిగుణ
రహితం సద్గురుంతంనమామి॥ ౧

## இதனதுபொருள்.

பிரமானந்தஸ்வரூபமாகியும், சிரேஷ்டமான சுகத்தைக்கொடுப்பதாகியும், நிர்விகாரமாகியும், ஞானவடிவமாகியும், பிரபஞ்சாதீதமாகியும், ஆகாசத்துக்குச்சமானமாகியும், மஹாவாக்கியங்களுக்கு இலட்சியார்த்தமாகியும், நித்தியமாகியும், நின்மலமாகியும், அசைவற்றதாகியும், எப்போதுஞ் சாட்சிமாத்திரமாகியும், பாவனைகளுக்கப்பாற்பட்டதாகியும், முக்குணங்களுமில்லாததாகியுமிருக்கின்ற சற்குருவை நமஸ்காரம் பண்ணுகிறோம்.

இதுவுமது.

మూకాంబికాకటాక్షాన్మోహవిహీనం గోతిద్వయంయ
యః ప్రకాత్మకం శేషగిరీశ మశేష వేదాంత దేశికం వందే॥ ౨

இதன்பொருள்.

மூகாம்பாளது கடாட்சத்தினாலே சீடஜன ரோகத்தினின்றும் விடுவிக்கவராகியும் ஏகஸ்வரூபராகியுஞ் சமஸ்தமான உபநிடதங்களுக் காசிரியராகியு மிருக்கின்ற சேஷகிரீசரென்னு நாமதேயத்தையுடைய வாசாரியரை நமஸ்காரம்பண்ணுகிறேன்.

## இராகத்துவேஷப் பிரகரணம்.

அவையாவன.

தனது நித்தியானந்த சுயம்பிரகாசத்தினின்றோர றிவுசங்கற்பமாகத் தோன்றிப் பகிர்முகமான விடத்துண்டான அறிவறியாமையே பிரகிருதிமகத்துவமெனவும், அவற்றினின்றும்விகற்பித்தெழாநின்ற அறிவினறிவறியாமையே மாயையவித்தையெனவும், அவற்றிற்பிரதிபலித்த ஜீவேஸ்வரசங்கற்ப விகற்பமேனா

னமுதலிய விருப்பத்தைக்கந்து தத்துவங்கள் எனவும், அவற்றினின்றுஞ் சங்கற்பரூபமாகப் பரிணமித்ததே பாஞ்சபூதபௌதிகமெனவும், அவற்றைச் சங்கற்பவிகற்பரூபமான சித்தவிருத்தியால்வருகிற இராகத்துவேஷங்களாலனுபவிக்குஞ் சுகதுக்கங்களே விடயமெனவுந்தோற்றிய அத்தியாரோபத்தை அபவாதத்தான் முன்னுண்டான முறைமைப்படி யடக்கித் தனது நிசானந்தத்தைவெளிப்படுத்தும்நிமித்தமருளே திருமேனியாக வெழுந்தருளிய சேஷாத்திரி சிவனுரென்னும்ஞானாசாரியர் சங்கற்ப விகற்பத்தினுல்விருப்புண்டாய் அதனுல் விடையங்களிற் சுழலாநின்ற சித்தத்தின் விருத்தியைக் கெடுத்ததற்குச் சுத்தி யுண்டாகும்பொருட் டவ்விருப்பு வெறுப்பை இராகத்துவேஷப் பிரகரண மெனவும், அச்சித்த சுத்தியுண்டான விடத்து யதார்த்தத்தைக் காண்பதற் கேதுவாகத் தோற்றின குறியைத் தெரிவித்தற்பொருட்டதனைச் சாதனசதுஷ்டயப் பிரகரணமெனவும், அவை யுதித்தவிடத்துப் பாஞ்சபூதபவுதிக முதலிய வனைத்துஞ் சடமெனத் தெரிவித்தற் பொருட்டவற்றைத் தூலப்பிரகரணமெனவும், அவைகள் சடமானவிடத் தவைகளை மேற்சித்தைக்கொண்டசைப்பிக்குமந்தக்கரண

ங்களைச் சடமென்றறிந்தவைகளை நீக்குதற்பொருட் டவற்றைச் சூக்குமப்பிரகரண மெனவும், அவைகள டங்கினவிடத் திவைகட்குக் காரணமான மாயைய வித்தையை யரோபிதமென்றறிந்தகற்றும்பொருட் டவற்றைக்காரணப் பிரகரணமெனவும், அவைகணீங் கினவிடத் தெதிரிட்ட சிவேஸ்வரர்களை மறைத்த மகத்துவம்புரசிவிதிகளைச் சிற்பிரகாசமாக நீக்குதற் பொருட்டவைகளைமகாகாரணப்பிரகரணமெனவும், இவைகளனைத்துந்தற்பிரகாசமாக நீங்கினவிடத்துத் தனது சுயம்பிரகாசமாக விளங்காநின்ற நித்தியா னந்தமோமதுஸ்வரூபமெனத் தெரிவிக்கும்பொருட் டதனை நிசானந்தானுபூதிப் பிரகரண மெனவும், பகுத்துக்கூறிய ஏழு பிரகரணங்களாம். இங்ஙன முறையாகக்கூறத் தொடங்கிய விப்பிரகரணங்களுண் முந்தின பிரகரணத்தில் இராகத்துவேஷாதிகளின் ஸ்வரூபத்தை நிரூபிக்கிறார்.

சுலோகம்.

రాగాద్యాష్టోదశ గుణా హేయోపాదేయ తాంగ
తాః। తేషాంస్వరూపంప్రథమంతావ త్తత్రనిరూప్యతే॥ 3

## இதன்றுபொருள்.

காமமுதற்பதினொறுகுணங்களில்- இராகமுதற்பதின் மூன்றுந் தள்ளத்தக்கனவும், இச்சைமுதன் மூன் றுங்கொள்ளத்தக்கனவுமாம். அவைகளின் ஸ்வரூபம் நிரூபம்நிரூபிக்கப்படுகின்றது. இராகத்தினம்சமோகா டாதலாற் காமாதியெனக் கூறினர். இப்பதின் மூன் றும் இராகத்துவேஷங்களின்பரியாயமெனக்கொள்க.

எந்த இராகத்துவேஷங்களினாற் றிரிவித கரணங்க ளுந் திரிவிதகன்மங்களைச்செய்கின்றதோ? அந்த இரா கத்துவேஷங்களின் குணங்களைநிரூபிக்கிறோம். அவை யாவன? இராகம்-துவேஷம்-காமம்-குரோதம்-உலோ பம்மோகம் - மதம்-மச்சரம்-ஈரிஷை-அசூயை-இடம் பம்தர்ப்பம்-அகங்காரமெனப் பதின்மூன்றும். இப்ப தின்மூன்றும்மோட்சமடைதற்கு விக்கினமாயிருக்கி ன்றபடியா னிவற்றை முமூட்சுவானவர்கள் காலத்திர யங்களிலும்பரிசியாமற்சர்வாத்மனா விட்டுவிடவேண் டியது. சித்தம். (இவைகளின்விபரம்) பரஸ்திரீகமனம் பண்ணவேண்டுமென்று விகற்பித்துவருகிற சித்தவி ருத்திக்கு. இராகமென்றுபேர், இதைமுமூட்சுவான வர்கள் காலத்திரயத்திலுமில்லாமற் சர்வாத்மனா விட்

டுவிடவேண்டியது.ஏன்விடவேண்டியதென்றால்,பூரு வத்தி லிராவணன் பரதாரமான சீதையம்மனை யிச் சித்த இராகத்தினாலவன் பிராணஹானிபந்துநாச மி ராச்சியஹானி யிகபரங்களி லபகீர்த்தி யிவை முதலா ன அநேகவநர்த்தங்கள் அனுபவித்ததும் இன்னஞ்ச கோதரரான சந்தோபசுந்தாளி வருந் திலோத்தமை யைக்கண் டென்பாரி என்பாரியென் றடித்துக்கொண் டிறந்ததும், இன்ன மநேகம்பேர் இந்த இராகத்தி னாற் றுக்க மனுபவித்ததுஞ் சாத்திரங்களிற் கண்டி ருக்கிறோ மானபடியினாலும், இப்போதிருக்கிறபேர் களு மிந்த இராகத்தினா லநேக துக்கமனுபவிப்ப தைப் பிரத்தியட்சமாகக் கண்டிருக்கிறபடியினாலும், இனிப் பிறக்கப்போகிறபேர்க ளிடத்திலு மிந்த இ ராக மிருந்தாற் றுக்கமே யனுபவிப்பார்களென்று தோற்றுகிறபடியினாலும்,இந்தஇராகத்தை மூமுட்சு வானவர்கள் சர்வாத்மனா விட்டுவிடவேண்டியது சித் தம். இப்படியே தனக்கொருவனபகாரம் பண்ணினா லவனுக்குப்பதிலபகாரம் பண்ணவேண்டுமென்று வி கற்பித்துவருகிற சித்தவிருத்திக்குத் துவேஷமென்று பேர்,இதை முமூட்சுவானவர்கள் காலத்திரயத்திலு மில்லாமற் சர்வாத்மனா விட்டுவிடவேண்டியது. ஏன்

விட்டுவிடவேண்டியதென்றால், பூருவத்தில் இரணிய கசிபன் றன் றமையனைக்கொன்ற நாராயணனைக்கொல்லவேண்டுமென்ற துவேஷத்தின லவனுடைய பிராணஹானி பந்துநாசம் இராச்சியஹானியிகபரங்களிலபகீர்த்திகளிவைமுதலான அநேகவநர்த்தங்களனுபவித்தது மின்னு மநேகம்பே ரிந்தத்துவேஷத்தினால் துக்கமனுபவித்ததுஞ் சாத்திரங்களிற் கண்டிருக்கின்றே மானபடியினாலும், இப்போ திருக்கிறபேர்களு மிந்தத்துவேஷத்தின லநேகதுக்க மனுபவிப்பதைப் பிரத்தியட்சமாகக் கண்டிருக்கிறபடியினாலும், இனிப் பிறக்கப் போகிறபேர்களிடத்திலு மிந்தத் துவேஷமிருந்தாற் றுக்கமே யனுபவிப்பார்களென்று தோற்றுகிறபடியினாலும் இந்தத்துவேஷ முமூட்சுவானவர்கள் சர்வாத்மன விட்டுவிடவேண்டியது சித்தம். இப்படியே புத்திரமித்திர களத்திரகிரக்கிராம க்ஷேத்திரதனதான்யாதிகண் மேன்மேலுஞ் சம்பாதிக்கவேண்டுமென்று விகற்பித்துவருகிறசித்த விருத்திக்குக்காமமென் றுபேர், இதைமுமூட்சுவானவர்களகாலத்திரயத்திலுமில்லாமற் சர்வாத்மன விட்டுவிடவேண்டியது. ஏன்விடவேண்டியதென்றால், பூருவத்தில் நரகாசுரன் இலட்சம் ஸ்திரிகளைக் கலியாணஞ்செய்

வதற்காசித்துத்தேவஸ்திரீகள்பதினுயிரம்பேர்களைச் சிறைபிடித்து வந்ததைக்கேட்ட ஸ்ரீகிருஷ்ணமூர்த்தியால் பிராண ஹானி பந்துநாச மிராச்சியஹானி யிகபரங்களி லபகீர்த்தி யிவைமுதலான துக்கங்கள னுபவித்தது மின்னும்மநேகம்பேர் துக்க மனுபவித்த துஞ் சாத்திரங்களிற் கண்டிருக்கிறமானபடியினு மிப்போதிருக்கிறபேர்களு மிந்தக் காமத்தினலேநேகதுக்க மனுபவிப்பதைப் பிரத்தியட்சமாகக் கண்டிருக்கிற படியினுலும், இனிப் பிறக்கப்போகிறபேர் களிடத்திலு மிந்தக் காமமிருந்தாற் றுக்கமே யனுபவிப்பார்களென்று தோற்றுகிற படியினுலும், இந்தக்காம முமூட்சுவானவர்கள் சர்வாத்துமனு விட்டுவிடவேண்டியது சித்தம். இப்படியே தனக்குவேண்டிய காரியங்களி லொருவன் விக்கினம் பண்ணினு லவனிடத்தி லாக்கிரகமாக விகற்பித்து வருகிறசித்த விருத்திக்குக் குரோத மென்றுபேர், இதை முமூட்சுவானவர்கள் காலத்திரயத்திலுமில் லாமற் சர்வாத்மனு விட்டுவிட்வேண்டியது. ஏன் விடவேண்டியதென்றால், பூர்வத்தி லபகாசூரன் றன துபுசிப்பிற்கு விக்கினஞ் செய்த வீமராசன்பேரிற் குரோதம்வைத்ததனு லவன் பிராண ஹானி பந்துநா

சமிராச்சியஹானியிகபரங்களி லபகீர்த்தி யிவைமுத லான அனேக வனர்த்தங்க ளனுபவித்தது மின்ன மநேகம்பேரிந்தக் குரோதத்தினல் துக்க மனுபவித் ததுஞ் சாத்திரங்களிற் கண்டிருக்கிறே மானபடியி னுலும், இப்போதிருக்கிற பேர்களிந்தக் குரோதத்தி னற் றுக்கமனுபவிக்கிறது பிரத்தியட்சமாகக் கண்டி ருக்கிறபடியினுலும்,இனிப் பிறப்பிக்கப்போகிறபேர்க ளிடத்திலிந்தக்குரோத மிருந்தாற்றுக்கமேயனுபவிப் பார்களென்று தோற்றுகிறபடியினுலு மிந்தக் குரோ தமுமூட்சுவானவர்கள் சர்வாத்மனு விட்டு விடவேண் டியதுசித்தம். இப்படியே தான் சம்பாதித்த பதார்த் தங்களிலொருத்தருக் கொருகாசளவு செலவுபண்ண லாகாதென்று விகற்பித்துவருகிற சித்த விருத்திக்கு உலோபமென்றுபேர், இதை முமூட்சுவானவர்கள் காலத்திரயத்தினு மில்லாமற் சர்வாத்மனு விட்டுவிட வேண்டியது. ஏன் விடவேண்டியதென்றால், பூர்வத் தில் துரியோதனனெனவன் சூதாடிக்கெலித்த பாண் டவர்களுடைய இராச்சியத்தி லவர்கள் வசிக்கக்கூட விடங்கொடுக்கமாட்டேனென்றஉலோபத்தினலவன் பிராணஹானி பந்துநாச மிராச்சியஹானி யிகபரங் களி லபகீர்த்தி யிவைமுதலான அநேகவனர்த்தங்கள

னுபவித்ததும்.பின்னு மநேகம்பேர் துக்கமனுபவித்த துஞ் சாஸ்திரங்களிற் கண்டிருக்கிறோமானபடியினு லும், இப்போதிருக்கிறபேர்க ளிந்த உலோபத்தினல நேகதுக்க மனுபவிப்பதும் பிரத்தியட்சமாகக்கண்டி ருக்கிறபடியினுலும், இனிப் பிறக்கப்போகிறபேர்களி டத்திலு மிந்த உலோபம் இருந்தாற் றுக்கமே யனுப விப்பார்க ளென்று தோற்றுகிறபடியினுலும், இந்த உலோபம் முமூட்சுவானவர்கள் சர்வாத்மனுவிட்டுவி டவேண்டியது சித்தம். இப்படியேதான் சம்பாதித்த பதார்த்தத்தின்பேரிற் பிரியமோதப்பிரமோதமாய்வி கற்பித்துவருகிறசித்தவிருத்திக்குமோகமென்றுபேர், இந்தமோக முமூட்சுவானவர்கள் காலத்திரயத்தி னுமில்லாமற்சர்வாத்மனுவிட்டுவிடவேண்டியது. ஏன் விடவேண்டியதென்றால், பூருவத்தில் தசரத மகாரா சன் தனதுஜேஷ்டபுத்திரனை ஸ்ரீராமன்பேரில்வைத் தமோகத்தி லவர்மாதுருவாக்கிய பரிபாலன நிமித் தங் காட்டுக்குப்போன அதனு லிவர் பிராணஹானி பந்துநாச மிராச்சியஹானி யிகபரங்களி லபகீர்த்தி இவை முதலான அநேக வநர்த்தங்க ளனுபவித்தது மின்னுமிந்த மோகத்தி லநேகம்பேர் துக்க மனுப வித்ததுஞ் சாஸ்திரங்களிற் கண்டிருக்கிறோமானப

டியினலும், இப்போதிருக்கிறபேர்க ளிந்த மோகத்தி னலநேகந் துக்கங்க ளனுபவிக்கிறது பிரத்தியட்சமா கக் கண்டிருக்கிற படியினலும், இனிப் பிறக்கப்போ கிறபேர்களிடத்திலு மிந்த மோக மிருந்தாற் றுக்க மே யனுபவிப்பார்களென்று தோற்றுகிறபடியினலு மிந்த மோக முழுமூட்சுவானவர்கள் சர்வாத்மனு விட்டு விடவேண்டியது சித்தம். இப்படியே ஐஸ்வரியர்தமக் குள்மதத்தினுற்கொர்வித்துக்கிருத்தியாகிருத்தியந்தெ ரியாமல் விகற்பித்துவருகிற சித்த விருத்திக்கு மத மென்றுபேர், இந்த மத முமூட்சுவானவர்கள் காலத் திரயத்திலுமில்லாமற் சர்வாத்மனு விட்டுவிடவேண்டி யது. ஏன்விடவேண்டியதென்றால், பூருவத்தில் கார்த் திவீரியார்ச்சுனனென்பவன் றன்னிடத்தில் வந்த மகா ரிஷியான நாரதரைமதித் துபசாரம்பண்ணுமற் கொர் வித்திருந்ததைக்கேட்ட பரசுராமனலவன் பிராண ஹானி பந்துநாச மிராச்சியஹானி யிகபரங்களி லப கீர்த்தி யிவைமுதலான அநேகவநர்த்தங்களனுபவித் தது மின்னுமிந்தமதத்தின லநேகம்பேர் துக்கமனுப வித்ததுஞ் சாத்திரங்களிற் கண்டிருக்கிறோமானபடி யினலும், இப்போதிருக்கிறபேர்களிந்த மதத்தினல நேக துக்கமனுபவிக்கிறது பிரத்தியட்சமாகக்கண்டி

ருக்கிறபடியினாலும், இனிப் பிறக்கப்போகிறபேர்களிடத்திலும் இந்தமத மிருந்தாற் றுக்கமே யனுபவிப்பார்களென்றுதோற்றுகிறபடியினாலும், இந்தமுமூட்சுவானவர்கள் சர்வாத்மனா விட்டுவிடவேண்டியது சித்தம். இப்படியே ஒருத்தர் சுகமாயிருந்தா லவர்களைப்பார்த்துச்சகிக்காமல் விகற்பித்து வருகிற சித்தவிருத்திக்கு மச்சரமென்றுபேர், இந்தமச்சரமுமூட்சுவானவர்கள் காலத்திரயத்திலு மில்லாமற் சர்வாத்மனா விட்டுவிடவேண்டியது. ஏன்விடவேண்டிதென்றால், பூருவத்தில் சிசுபாலனெனவன் தருமராஜன் ராஜசூயயாகத்தி லக்கிர தாம்பூலம் வாங்கத்தக்கவராரென்று விசாரித்து ஸ்ரீகிருஷ்ணசுவாமிக்குக் கொடுத்ததைச் சகிக்காமல் மச்சரப்பட்டதினா லவனுடைய பிராணஹானிபந்துநாசமிராச்சியஹானியிசுபரங்களிலபகீர்த்தி யிவைமுதலான அநேகவனர்த்தங்களனுபவித்ததுமின்னுமிந்த மச்சரத்தினாலநேகம்பேர்துக்கமே யனுபவித்ததுஞ், சாத்திரங்களிற்கண்டிருக்கிறேமானபடியினாலும், இப்போதிருக்கிறபேர்களிந்த மச்சரத்தினாற் றுக்கமே யனுபவிக்கிறது பிரத்தியட்சமாகக் கண்டிருக்கிறபடியினாலும், இனிப்பிறக்கப்போகிறபேர்களிடத்திலு மிந்த மச்சர மிருந்தாற் றுக்க

மேயனுபவிப்பார்களென்று தோற்றுகிறபடியினலும், இந்த மச்சர முமூட்சுவானவர்கள் சர்வாத்மனு விட்டுவிடவேண்டியது சித்தம். இப்படியே தனக்கு வந்ததுக்கம்பி ரத்தியாருக்குவரலாகாதாவென்று வி கற்பித்துவருகிற சித்த விருத்திக்கு ஈரிஷை யென்று பேர். இந்தஈரிஷை முமூட்சுவானவர்கள் காலத்திரய த்திலுமில்லாமற் சர்வாத்மனு விட்டுவிடவேண்டிய து. ஏன் விடவேண்டியதென்றால், பூருவத்தில் அரு ணுட்சதன் தனக்குவந்த துக்கந் தனதிஷ்டனுனவரு ணுசுரனுக்கு வரலாகாதாவென் றெதிர்த்த விரிஷை யினுற் பிராணஹானி பந்துநாச மிராச்சியஹானி யிக பரங்களி லபகீர்த்தி யிவைமுதலான அநேக வனர்த் தங்க ளனுபவித்தது மின்னுமிந்த வீரிஷையினு லநே கம்பேர் துக்கமனுபவித்ததுஞ் சாத்திரங்களிற் கண் டிருக்கிறேமானபடியினலும், இப்போதிருக்கிறபேர் களிந்தவீரிஷையினுற்றுக்கமேயனுபவிப்பதைப்பிரத் தியட்சமாகக்கண்டிருக்கிறபடியினலுமினிப்பிறக்கப் போகிறபேர்களிடத்திலு மிந்த வீரிஷை யிருந்தாற் றுக்கமே யனுபவிப்பார்களென்று தோற்றுகிறபடியி னலும், இந்த வீரிஷை முமூட்சுவானவர்கள் சர் வாத்மனு விட்டுவிடவேண்டியது சித்தம். இப்படியே

தனக்குவந்தசுகம்பராளுக்கு வரலாமாமென்று விகற்பித்து வருகிற சித்த விருத்திக்கு அசூயையென்று பேர், இதை முமூட்சுவானவர்கள் காலத்திரயத்திலு மில்லாமற் சர்வாத்மனா விட்டுவிடவேண்டியது. ஏன் விடவேண்டியதென்றால், பூருவத்தில் பவுண்டரீகவாசுதேவனானவன் தனக்கும்வாசுதேவன்,கிருஷ்ணனுக்கும்வாசுதேவனென்று பேராமென்கிற அசூயையி னலவரிடத்தெதிர்த்துப் பிராணஹானி பந்துநாச மிராச்சியஹானியிகபரங்களி லபகீர்த்தி யிவைமுதலான அநேகவநர்த்தங்க ளனுபவித்தது மின்னுமநேகம் பேரிந்த வசூயையினாற் றுக்கமே யனுபவித்ததுஞ் சாஸ்திரங்களிற் கண்டிருக்கிறோ மானபடியினாலும், இப்போதிருக்கிறபேர்களுமிந்த அசூயையினாற் றுக்கமே யனுபவிப்பது பிரத்தியட்சமாகக் கண்டிருக்கிற படியினாலும், இனிப் பிறக்கப்போகிறபேர்களிடத்திலிந்தவசூயை யிருந்தாற் றுக்கமே யனுபவிப்பார்களென்றுதோற்றுகிறபடியினாலுமிந்தஅசூசைமுமூட்சுவானவர்கள் சர்வாத்மனா விட்டுவிடவேண்டியது சித்தம். இப்படியே தான்பண்ணினகருமத்தை நாலு பேரும்பார்த்துபளாநன்றாயிருக்கின்றதென்றுசொல்லவேண்டுமென்று விகற்பித்துவருகிற சித்தவிருத்

திக்கு இடம்பமென்றுபேர், இதை முமுக்ஷுவானவர்கள் காலத்திரயத்திலுமில்லாமற் சர்வாத்மனு விட்டுவிடவேண்டியது. ஏன்விடவேண்டியதென்றால், பூருவத்தில் நபூருவமகாராசனெனவன் றாருவாசரிஷியைப்பார்த்து நான்செய்த யாகங்களைப்போல யார்செய்யப்போகிறார்கள். இதுநன்றாயிருக்கிறதேயென்று கேட்கையிலேத்து திக்கைபோலஆயிரம்வருஷம்நெய்சொரிந்து யாகஞ்செய்தவனு மிப்படி கேட்கவில்லை. ஈதென்ன இடம்பயாகமென்று சொன்னவரைக்கோபித்த அவனது யாகத்தோடு மவன்பிராணஹானி பந்துநாசமிராச்சியஹானி யிகபரங்களிலபகீர்த்தி இவைமுதலான அநேகவநர்த்தங்க ளனுபவித்தது மின்னுமிந்த இடம்பத்தினு லநேகம்பேர் துக்க மனுபவித்ததுஞ் சாத்திரங்களிற் கண்டிருக்கிறே மானபடியினுலும், இப்போதிருக்கிறபேர்களிந்த இடம்பத்தினுற் றுக்கமேயனுபவிப்பது பிரத்தியட்சமாகக் கண்டிருக்கிறபடியினுலும், இனிப்பிறக்கப்போகிறபேர்க ளிடத்திலுமிந்த இடம்பமிருந்தாற் றுக்கமே யனுபவிப்பார்களென்றுதோற் றுகிறபடியினுலுமிந்தஇடம்ப முமுக்ஷுவானவர்கள் சர்வாத்மனு விட்டுவிடவேண்டியது

சித்தம். இப்படியே புத்திரகளத்திர தனதானியாதி சம்பத்துத்தனக்கேயுண்டு,தனக்கொருத்தருஞ் சமானமில்லையென்று விகற்பித்துவருகிற சித்தவிருத்திக்குத் தர்ப்பமென்றுபேர், இதைமுமூட்சுவானவர்கள் காலத்திரயத்திலு மில்லாமற்சர்வாத்மனு விட்டுவிடவேண்டியது. ஏன்விடவேண்டியதென்றால், பூருவத்திற்சதகந்தரனைவன் ஐஸ்வரியத்திற் றனக்கொருத்தருஞ்சமானமில்லையென்று அமரர்களுக்கு உபத்திரவஞ்செய்ததை நாரத ரிராமருக்கறிவிக்க,அவர்பாரியான சீதையம்மனலவன் பிராணஹானி பந்துநாசமிராச்சியஹானி இகபரங்களி லபகீர்த்தி யிவைமுதலான அநேகவநர்த்தங்க ளனுபவித்தது மின்னுமிந்தத்தர்ப்பத்தின லநேகம்பேர் துக்கமே யனுபவித்ததுஞ் சாத்திரங்களிற் கண்டிருக்கிறோ மானபடியினுலும், இப்போதிருக்கிறபேர்களிந்தத் தர்ப்பத்தினற்றுக்கமே யனுபவிப்பது பிரத்தி யட்சமாகக் கண்டிருக்கிறபடியினுலும், இனிப் பிறக்கப்போகிறபேர்களிடத்திலுமிந்தத் தர்ப்பமிருந்தாற் றுக்கமேயனுபவிப்பார்களென்று தோற்றுகிறபடியினுலு மிந்தத்தர்ப்பமுமூட்சுவானவர்கள் சர்வாத்மனு விட்டுவிடவேண்டியது சித்தம். இப்படியே அடா! என்னை யறியாயா?

நான் பிடித்த காரியம் விடுவேனு? நீயாவென்க்குப்புத்
திசொல்கிறவனென்று விகற்பித்துவருகிற சித்தவிரு
த்திக் ககங்கார மென்றுபேர், இதை முமூட்சுவான
வர்கள் காலத்திரயத்திலுமில்லாமல் சர்வாத்மனுவிட்
டுவிடவேண்டியது.ஏன்விடவேண்டியதென்றால், பூரு
வத்தில் மதுகைடவரென்பவர்கள் மகாவிஷ்ணுவோ
டு பதிணுயிரம்வருஷம் யுத்தஞ்செய் திளையாம லவர்
வரங்களுக் காசியாமற்றுங்களந்த விஷ்ணுவுக்குவரங்
கொடுத்த அகங்காரத்திணுற் பிராணஹானிபந்துநாச
பிராச்சியஹானி இகபரங்களி லபகீர்த்தி யிவைமு
தலான அநேகவநர்த்தங்க ளனுபவித்தது மின்னு
மிந்த அகங்காரத்திணு லநேகம்பேர் துக்கமனுபவித்த
துஞ் சாத்திரங்களிற் கண்டிருக்கிறு மானபடியினு
லும், இப்போதிருக்கிற பேர்களிந்த அகங்காரத்தி
ணுற் றுக்கமேயனுபவிப்பது பிரத்தியட்சமாகக் கண்
டிருக்கிறபடியினுலும், இனிப் பிறக்கப்போகிற பேர்
களிடத்தி லிந்த அகங்காரமிருந்தாற் றுக்கமே யனு
பவிப்பார்க ளென்று தோற்றுகிறபடியினுலு மிந்த
அகங்கார முமூட்சுவானவர்கள் சர்வாத்மனு விட்டு
விடவேண்டியது.சித்தம். இந்த இராகமுதல்சங்கார
மீறுன பதின்மூன்றுகுணங்களினு லிராவணன்முதல்

மதுகடைவா ஷ்ரூணம்பர்கள மஹாசமர்த்தர்களா யிருந்து மவர்கள் பிராணஹானிமுதலான அநேகவ நர்த்தங்கண் முன்னனுபவித்தது சாத்திரங்களிற் க ண்டிருக்கிறோ மானபடியினாலு மிப்படியே சத்திய வர்த்தமானகாலத்திலு மிந்த இராகாதிகுணங்களா ல நேகஜனங்கள் பிராணஹானிகளும், அநேக ரோகங் களும், அநேக திரவியநாசங்களும், பந்துக்கள் வி ரோதங்களும், அபகீர்த்திகளும் இவைமுதலான அநேகவநர்த்தங்க ளனுபவிக்கிறது பிரத்தியட்சமா கக் கண்டிருக்கிறோ மானபடியினாலும், இனிப்பிறக் கப்போகிறபேர்களு மிந்த இராகாதிகுணங்களினின் றும் விடுபடாமற் போனார்களாகி லிப்படியேயநேகவ நர்த்தங்களனுபவிப்பார்களென்றுதோ ற்றப்படுகிறப டியினாலும், இந்த இராகாதி பதின்மூன்று குணங்க ளு மோக்ஷமார்க்கத்துக்குச் சத்துருவாயிருக்கிறபடி யினாலும், ஜநநமரணப் பிரவாகரூபமான நரகத்துக் கேதுவாயிருக்கிறபடியினாலும், இப்பதின்மூன்று கு ணங்களையு முமுட்சுவானவர்கள் சர்வாத்மனா விட்டு விடவேண்டியது சித்தம். இவைகளாலுண்டான ஜந நமரணமே நரகமென்பதாம். இதற்குச் சமுதாயமிச் லை. ஜநநமரணரூபமான தேகமே நரகமென்பதற்குப்

பிரமாணம்-எங்கேசரீரமுண்டோ அங்கே:யெல்லாந் துக்கமுண்டு, எங்கே சரீரமில்லையோ அங்கே யெல் லாந் துக்கமில்லையென்று வேதத்திற் சொல்லியிருக்கி றபடியினு லிந்தச்சரீரமே சகலதுக்கங்களுக்குஞ்சக லவநர்த்தங்களுக்கு மேதுவாகவிருப்பதினு லிந்தச்ச ரீரமே நரகமென்று சொன்னது சித்தம். ஆதலாலிந் தச் சரீரத்துக்கேதுவான விப்பதின்மூன்று குணங்க ளையு முமூட்சுவாயிருக்கப்பட்டபேர்க ளவசியம்விட் டுவிடவேண்டியது சித்தம். இனிக் கொள்ளத்தக்க வைகளான விச்சைமுதன் மூன்றுகுணங்களையு நிரூ பிக்கிறோம். அவையாவன-பசிதாகநிமித்த மன்னபா னுதிகிராகியமு மலமூத்திர விசர்ச்சனமும் பண்ண வேண்டுமென்றுவருகிற சித்தவிருத்திக் கிச்சையென் றுபேர், இவைபண்ணுமற்போனுற் றுக்கமும் பண் ணினுற் சுகமுமாயிருக்கும். இதனுற் பந்தமோக்ஷஞ் சுவர்க்கநரகமில்லையாதலாற் கொள்ளத்தக்கதாம்.இப் படியே மகாதேவரீரிடத்திற் பிரியம்வருகிறசித்தவி ருத்திக்குப் பத்தியென்றுபேர், குருவேதாந்தசாத்தி ரங்களின் மிகவும்விசுவாசம்வைத்த சித்தவிருத்திக்கு ச்சிரத்தையென்றுபேர், இந்தப் பத்திசிரத்தை முத் தியைகொடுப்பதற் கேதுவாதலினுலும்,பூருவத்திற்

கட்டுவாங்கதனென்கிற மகாராசன் இந்தச்சிரத்தா பத்தியினு லிரண்டுநாழிகையின் முத்தியை யடைந் தானென்று சாத்திரங்களிற் கண்டிருக்கிறே மானப டியினுலு முமூட்சுவானவர்க ளிந்தச் சிரத்தாபத்தி யவசிம் பண்ணவேண்டியது சித்தம். இராகாதி பதி ஞறுகுணங்களும் நிரூபிக்கப் பட்டன.

இராகத்துவேஷப்பிரகரணஞ் சம்பூர்ணம்.



உ

திருச்சிற்றம்பலம்.



இரண்டாவது.

## சாதனசதுஷ்டயப் பிரகரணம்.

முற்பிரகரணத்திற் கற்புனுரூபமான விஷயசு கங்களைப் பிரியமாக விசுவசித் ததிற் சுழலாநின்ற ம நோவிருத்திக் கவைக டுன்பமெனத் தெரிவித் தவ்வி ருத்தியை விஷயசுகங்களினின் றுநீக்கி மேல் ஆதார்த் தசுகத்திற் பிரியம்வைக்கும்படி செய்ததனுலிரண்டா

ன சிரத்தாபத்தியினுற் சித்தசுத்தியுண்டாக்கிப் பின் பவ்யதார்த்தம் வெளிப்படுதற் கேதுவான சாதனச துஷ்டயப் பிரகரணம் நிரூபிக்கிறுர்.

## சுலோகம்.

சதுஷ்டயம் ஸாதநாநாம் வேதாந்தேஷுப்ரதிஷ்டிதம் தஸ்யஸ்வரூபம்க்ரமத் ஸ்தாவத்தத் ரநிரூப்யதே.

## இதனதுபொருள்.

வேதாந்தத்தி னன்குசாதனங்க ளதிகாரிகளுக் காகச்சொல்லியிருக்கின்றன. அவைகளின் ஸ்வரூபங் கிரமத்தி னிரூபிக்கப்படுகின்றது.

எந்தச்சாதனசதுஷ்டய சமபத்தியினுல யாவரும் மோக்ஷமடைவார்களோ? வந்தச்சாதன சதுஷ்டய சம்பத்தியை நிரூபிக்கிறோம், அவையாவன-நித்தியாநித்திய வஸ்துவிவேகம், இகபர முத்திரார்த்தபலபோகவிராகம், சமாதிசட்க்சம்பத்தி, முமூட்சுத்துவமென நான்குவிதமாம். இவற்றில் நித்தியாநித்திய வஸ்துவிவேகமென்பது-பிரமமே நித்தியவஸ்து, சகத்தநித்தியவஸ்துவெனப் பகுத்தறிவதாம்.

இச்சக மநித்தியமென்ப தெப்படி யென்றால், இவை பூதபவுதிகாத்மகமானபடியினா லனித்தியமே யாம். இங்ஙனம் பூதபவுதிகாத்மகமாகத் தோற்றப் படுகிற சகத்தின்முன்னே பவுதிகங்களுக்கநித்தியத் துவநிரூபிக்கிறோம்.

அப்பவுதிகமாவ தியாதெனில், நால்வகையோனி எழுவகைத்தோற்றம், எண்பத்துநான்கு லக்ஷம் பேதங்களாயுள்ள சரீரங்களாம்.

அவற்றில் நால்வகை யோனியென்பது-சராயுச மண்டசஞ்சுவேதசமுற்பிச மென்பனவாம், இவற்றிற் பையிற் கட்டுப்பட்டுப்பிறப்பது சராயுசமும், முட்டையிற்கட்டுப்பட்டுப்பிறப்பது அண்டசமும், வியர்வையிடமாகப் பிறப்பது சுவேதசமும், பூமியிடமாகப்பிறப்பது உற்பிசமுமாம்.

எழுவகைத்தோற்றமென்பது-தேவரும்மானிடரும் மிருகமும் பட்சிகளும் ஊர்வனவும் நீர்வாழ்வனவுந் தாபரங்களுமாம்.

எண்பத்துநான்கிலக்ஷம் பேதமென்பது-தேவபேதம் பதினாலிலக்ஷமும், மானிடபேத மொன்பதில

க்ஷமும், மிருகபேதம்பத்திலக்ஷமும், பட்சிபேதம் பத்திலட்சமும், ஊர்வனபேதம் பதினோரிலட்சமும், நீர்வாழ்வனபேதம் பத்திலக்ஷமும், தாபரபேதம் பதினெட்டிலக்ஷமுமாம்.

இவற்றில் தேவகந்தருவசித்தசாத்திய கின்னரகிம்புருடகுய்யகவித்தியாதர யட்சராட்சத பூதப்பிரேத பிசாச் சாகினிடாகினிவேதாள தியான தேவசரீரங்களும், மனுமாந்தாதிசக்கிரவர்த்தி பிரமக்ஷத்திரியவைசியசூத்திரர் முதலான நரசரீரங்களும், காமதேனு சிம்மமுதலான மிருகசரீரங்களும், அன்னங் கருடன் முதலான பட்சிசரீரங்களும், சேடனெறும்புமுதலிய ஊர்வனசரீரங்களும், மகரமச்சங் கூர்மமுதலிய நீர்வாழ்வன சரீரங்களும், கற்பகவிருட்சம் பாரிசாத முதலிய தாபரசரீரங்களுமாம்.

பூர்வத்தி லித்தேவர்முதலிய எண்பத்துநான்கிலட்சம் பேதமாயுள்ள சரீரங்களும் நசித்துப்போனது சாத்திரங்களிற் கண்டிருக்கிறோ மானபடியினாலும், இப்படியே வர்த்தியவர்த்தமான காலத்திலுமிருக்கின்ற மாதாபிதாமுதலான சகலசரீரங்களும் நசிப்பதுபிரத்தியட்சமாகக் கண்டிருக்கிறபடியினாலும், இனிப்

பிறக்கப்போகிற சகல சரீரங்களு மிப்படியே நசிக்கு மென்று தோற்றப்படுகிறபடியினலு மிந்தப் பவுதிக மான சகலசரீரங்களும் அநித்தியமென்பது சித்தம்.

இப்படியே பிருதிவியாதி பஞ்சபூதங்களுக்கும் அநித்தியத்துவம் நிரூபிக்கிறோம்.

அஃதெப்படியென்றால், இப்பூதங்கள் பிறந்திருக்கிறபடியினலும், அவயவிகளா யிருக்கிறபடியினலும், பிரளயகாலத்தி னசித்துப்போகிறபடியினலும் அநித்தியமேயாம்.

அவைக ளெப்படிநசிக்கிறதென்றால், பிரமப்பிரளயம்வருகிறகாலத்திற் பனிரண்டுசூரியர்களு முதயமாய் நூறுவருஷமழையில்லாமலெரித்துச் சகத்தெல்லாம் பஸ்பம்பண்ணிப் பூமியைத் தாங்கிக்கொண்டிருந்தவாதிசேடனுடைய மகுடங்களைப் பஸ்பம்பண்ணுகிறபோ தந்தவாதிசேடனுடைய முகங்களிலிருந்து காளகூட விஷாக்கினிபிறந் தந்த விஷாக்கினியுஞ் சூரியாக்கினியுங்கூடி யந்த ஆதிசேடன்முதற் றவாசாதித்தாளையும் பஸ்பம்பண்ணி யப்படிப் பஸ்பம் பண்ணின அக்கினியினின் றுஞ் சத்தமகா மேகங்கள் பிறந்து நூறுவருஷம் யானைத்துதிக்கைபோல வரு

ஷதாரைகள்வருஷிக்கும். அந்தவருஷசல்மே காரண் மாநிற்கும்.அந்தச்சலத்தில் அப்பூமி பஸ்பம்விநயமா கும்.அப்போதந்தச்சலம்வாயுஸ்தம்பமாநிற்கும்.அப் படிநிற்கின்ற சலத்தில் வடவானலம்பிறந்தந்தக் காரணவமான சலமெல்லாங்கிரிகிக்கும். அவ்வடவாக் கினியும் பிரசண்டவாயுவி லீனமாகும். அந்த வாயுவு மாகாசத்திலீனமாகும். அவ்வாகாசமு மஞ்ஞானத்தி லீனமாகும்.அவ்வஞ்ஞானமும்பிரமத்திலீனமாகும். அப்பிரமமொன்றுமே சேஷித்துநிற்கும். ஆனபடியி னாற்பஞ்சபூதபவுதிகாத்மகமான சகத்தநித்தியமென் றுசொன்னதும் இப்படிவிசேஷித்துநின்ற பிரமத் துக்குவேறேகாரணமில்லாதபடியாற் பிரமமே நித்தி யமென்றுசொன்னதும் சித்தம்.

இங்ஙனம் நித்தியாநித்திய வஸ்துக்களி னிச்சயந் தெரிதலாகிய முதற்சாதனங் கைவந்தாற் போதா தோவென்றாற் போதாது. என்போதாதென்றால், சில வித்துவான்கள் சாஸ்திரபாண்டித்தியத்தினு லாத்மா வொன்றுமேநித்தியமென்றுஞ்சகத்தநித்தியமென்றுஞ் சொல்லிக்கொண்டு ஸ்திரீ புத்திர தனதானியாதி போகங்களி லிச்சைவைத்துக்கொண் டிருக்கிறதினு லநித்தியமானது நித்தியமென்று வருமாதலாணிரண்

டாஞ்சாதனமான விகாமுத்திரார்த்த பலபோகவிரா கமுஞ் சம்பாதிக்கவேண்டும்.

இவ்விகாமுத்திரார்த்த பலபோகவிராகமாவ தியா தென்று லதையும் நிரூபிக்கிறோம்.

அஃதாவது-இகலோக வைராக்கியமென்றும் பர லோகவைராக்கியமென்று மிரண்டுவிதமாம்.

அவற்றி லிகலோக வைராக்கியமாவது-ஸரக்குசந் தன வநிதாதி விஷயங்களில் வாந்தாகன மூத்திரபுரீ ஷங்களிலெப்படி யிச்சைவாராதோ அப்படி யிச்சை வாராமற் போகிறது. இவ்வித வைராக்கிய மில்லா விட்டா லிகத்திற் றன்சம்பாதிக்க வேண்டுமென்கிற புத்திர மித்திர களத்திர பசுபிரத்திய பலபந்து கிர மக்ஷேத்திர தனதானியாதிகண் முதலியவற்றைச் சம்பாதிக்க வேண்டு மென்றால் மிகவும் பிரயாச சாத் தியமா யிருக்கிறபடியினாலும், பிரயாசப்பட்டெத்த னம் பண்ணினலப்படி யெத்தனம்பண்ணின பதார்த் தங்களிற் சிறிது கூடிவருகிறதுஞ் சிறிது கூடிவரா மலும் போகிறபடியினாலும், அப்படிக் கூடிவராத பதார்த்தத்தைத் தொட்டு வெகுதுக்கபரம்பரைகள் வருகிறபடியினாலும், அந்தத் துக்கத்தோடு கூடிக்

கொண்டிருக்கிறவேளையிற் பெரியோர்களா யிருக்கப்பட்ட பேர்கள்வந் தேதாகிலுஞ் சற்காரம்பண்ண வேண்டுமென்று கேட்டதுண்டானா லவர்கள்பேரில் யுத்தாயுத்தங்கள் தெரியாமற் கடினமா யிருக்கப்பட்ட சொல்லினாற் றிரஸ்காரம் பண்ணுகிறான். அவர்களையப்படி சொல்கின்றபோது வீட்டிற் றாயார் முதலானபேர் பிரிய வசனஞ் சொல்லிப் பெரியவர்களை யப்படிச் சொல்லலாமாவென்று சொன்னதே யுண்டானா லவர்கள்பேரி லாக்கிரகமாக விழுந்து யுத்தாயுத்தமில்லாத கடினமான சொல்லினா னிராகரிக்கிறானானபடியினாலும், அப்படி நிராகரித்ததனா லநேகவனர்த்தங்களும் அநேகதோஷங்களும் வருகிறபடியினாலும், அப்பாவத்தினால் நரகங்களில் விழுகிறானானபடியினாலும், இப்படி யசாத்தியமான பதார்த்தங்களினா லித்தனை யனர்த்தங்கள் பிறக்கச்சே சாத்தியமான பதார்த்தங்களினா லனர்த்தங்கள் வருகிறதுக்குச் சொல்லவேண்டுமோ?

அஃதெப்படியென்றால், சாத்தியமான வொரு [illegible]ாசாதியைத்தொட்டுச் சோரபயங்களுந் தாயார் தகப்பனார் விரோதங்களும் அண்ணன் தம்பி விரோ

தங்களும் அன்றித் தான் செய்ய வேண்டுமென்கிற நல்லகாரியங்களும் விரோதமாய்த் தன்னை யெண்ணுமல் நடக்கிறபடியினுலும் துக்கமே தோற்றுகிறது. இப்படியே சாத்தியமா யிருக்கப்பட்ட தனத்தைக் குறித்துத் தாயாதிகள் பயமும் இராசசோ ராக்கினி பயமும் இவைமுதலான மகாப்பதுக்கங்களுக் கேது வாயிருக்கிறபடியினுலும், இப்படியே சாத்தியமான புத்திரனைத் தொட்டுச் சொன்னபேச்சுக் கேளாமற் றிரிகிருனென்றும் புத்திசாலியாகாமற் போனுனென் றுஞ் சாரசோரனுகத் திரிகிரு னென்றும் இவை முதலான அநேக துக்கங்கள் வருகிற படியினுலும், இப்படியே சாத்தியமா யிருக்கப்பட்ட விப்பதார்த் தங்களினுற் றுக்கமே தோற்றுகிற தானபடியினுலும் இந்த விகலோக வைராக்கியமும் அவசியஞ் சம்பா திக்க வேண்டியது சித்தம்.

பரலோக வைராக்கியமானு தேதென்ருல், சுவர்க்கலோக முதற் சத்தியலோகம்வரைக்கு முள்ள சகலலோகபோகங்களும் வந்தாசனமுத்திர புரீஷங் களி லெப்படி யிச்சையில்லையோ? அப்படி யிச்சை யற்றுப்போகிறதாம்.

இப்பரவைராக்கியம் பண்ணுமற்போனாற் ஞேஷமென்னவென்றால், இதத்தில் நகுஷமகாராசன் தேவேந்திர போகத்தின்பேரி லிச்சைப்பட்டுச் சேடச மகாதானங்களு மசுவமேதயாகங்களுஞ்செய்து சுவர்க்கத்துக்குப்போய்த் தேவேந்திரப் பட்டமுங் கட்டிக்கொண் டிந்திராணியோடு போகிக்க வேண்டுமென்ற அதிக பரபரப்பினுற் பல்லக் கெடுக்கிறசத்தரிஷி கலத்தியரிஷியை யவமானம் பண்ணினபடியினு லவர் சபிக்க அச்சாபத்தினு லவ் விந்திராணிபோக முதலான சகலபோகங்களும் வியர்த்தமாய்த் தான் பண்ணின எக்கியதான பலன்களும் வியர்த்தமாய் மலைப்பாம்பாய்ப் பூமியில் விழுந்துபோனபடியினுலும், இன்னுமநேகம்பேர் சுவர்க்காதி போகங்கள் வேண்டுமென்ற வாசையினு லநேக எக்கியங்களு மநேக தருமங்களுஞ் செய்து அவைகள் வியர்த்தமாயநேக துக்கங்க ளனுபவிக்கிறார்க ளானபடியினுலும், அச்சுவர்க்கலோக முதற் சத்தியலோகபரியந்தமுள்ள லோகங்களிருக்கிற பிரமாதி சகல தேவதைகளுஞ் சகல ரிஷிகளு மொருத்தருக் கொருத்த ரன்னியோன்னிய சாபத்தினுலு மொருத்தர் பெண்சாதியை யொருத்த ரபகரிக்கிறபடியினுலு மிராட்சதர்களி

ராச்சியங் கட்டிக்கொண்டு போவார்களென்கிறபயத்தினாலுமொருத்த ரைஸ்வரியத்தை யொருத்தர் அபகரிக்கிறபடியினாலு மிப்படியே வைகுண்டத்திலுங் கைலாசத்திலு மிருக்கிறபேர்கள் கூட அன்னியோன்னிய சாபங்களினாற் றுக்கரூபமா யிருக்கிறபடியினாலு மவ்விடமடைதற்கு மிகவும் பிரயாசசாத்தியமா யிருக்கிறபடியினாலும் அவசியமாய்ப் பரவைராக்கியம்பண்ணவேண்டியது சித்தம்.

இப்படி யிகபர வைராக்கியங்களாற் சகலபோகங்களையுஞ் சுகதுக்க கன்மங்களையும் விட்டு நிராசையா யிருக்கிற விரண்டாஞ் சாதனங் கைவந்தாற் போதாதோ வென்னிற் போதாது. என் போதாதென்றால், சிலபாஷண்டர்கள் காஷாயந்தரித்துச் சந்நியாசியென்று பேரிட்டுக்கொண்டு சம்சாரத்தையும் மோட்சப் பிரதானமான கன்மங்களையும் விட்டுத் தன்சரீர சவுக்கியம் பண்ணும் பொருட்டுக் குட்சிவாதைதீரச் சிலவித்தைகளை கற்றுக்கொண்டு தான் பெரியவனென்கிற பேரினாலெனக்குச் சமானமாரென்றகங்கரித்துஞ் சபித்துந் திட்டியு மிதனால் வெகுதுக்கமடைந்தவனாக முன்னுள்ள வில்லறமுமிங்னுள்ள துறவறமு மின்றி யுபயப் பிரஷ்டத்துவம்

வருகிறபடியினால் மூன்றாஞ் சாதனமான சமாதிசட்க சம்பத்தியுஞ் சம்பாதிக்கவேண்டும்.

சமாதிசட்கசம்பத்தியாவ தியாதென்னி லதையும் நிரூபிக்கிறோம்.

அவையாவன-சமம், தமம், உபரதி, திதீட்சை, சமாதானம், சிரத்தை யென ஆறுவிதமாம்.

இவற்றிற்சமமாவது-மனோநிக்கிரகம். அஃதாவது மனதைச் சலியாமலகத்தி லடக்குவதாம்.

இந்தமனோ நிக்கிரகஞ் செய்யாமற்போனாற் பூருவத்தி லபிமானித்திருந்த பதார்த்தங்களைசித்தமனைவைகளை வாசனையா னினைத்துக்கொண்டே யிருக்கும். அதனாற் றுக்கமே யுண்டா யிருக்கிறபடியினாலும், சத்தியவர்த்தமான காலத்திற்றான் சம்பாதித்தபதார்த்தங்களின் மிகுந்த மோகமாயவைகளை நினைத்துக் கொண்டே யிருக்கும். அப்போ தப்பதார்த்தங்களுக்குச்சற்று விக்கினம்வந்த துண்டானா லதனால் மிகவுந் துக்கமே தோற்றுகிறபடியினாலும், இனி வரப்போகிற பதார்த்தங்களை வாசனையா னினைத்துக்கொண்டே யிருக்கும். அவை வராமற்போனாற் றுக்கமே

விளைகிறபடியினலும், இத்துக்கங்கண் மனதி லடை்ந் திருக்கச்சே பெரியோர்கள் வசனங்கள் பிடிபடாதப டியினலும், இந்த மனோநிக்கிரகமவசியம் பண்ணவே ண்டியது சித்தம்.

தமமாவது - பாகியேந்திரிய நிக்கிரகம். அஃதா வது சுரோத்திராதி ஞானேந்திரிய பஞ்சகமும் வாக்காதி கன்மேந்திரிய பஞ்சகமும் இவ்விந்திரியங் களைச் செயம்பண்ணுமற்போனுல் இப்பாகியேந்திரியா் விஷயங்களிற்போய் விழும். அப்படியே போய் விழுந் ததேந யுண்டானல் தன் மகனைத் தான் ஹானிவரும். அஃதெப்படியென்றால், சத்திய விஷயத்தினல் மானு க்கெப்படி ஹானி வந்ததோ? பரிசவிஷயத்தினல் யா னைக்கெப்படி ஹானி வந்ததோ? ரூப விஷயத்தினல் விட்டிற்பூச்சிக் கெப்படி ஹானிவந்ததோ? இரசவிஷ யத்தினல் மீனுக்கெப்படி ஹானி வந்ததோ? கந்தவி ஷயத்தினல் வண்டுக்கெப்படி ஹானிவந்ததோ? இப் படியே இந்தப் பாகியேந்திரியங்கள் விஷயங்களிற் சென்றால் மகத்தான ஹானிவருமானபடியினல் இப்பா கியேந்திரியங்கள் விஷயங்களிற் போய் விழாமலவ சியம் நிக்கிரகஞ்செய்யவேண்டியது சித்தம்.

உபரதியாவது ஈஷணாத்திரயத்தியாகப் பூருவக மான சர்வகர்ம சந்நியாசமாம்.

அக்கன்மமாவது பாவகன்மமெனவும், புண்ணி யகன்மமெனவு மிரண்டாம். இவ்விற்றிற் பாவகன்மத் தினு னரகப் பிராப்தியுந் திரியக்காதி சரீரமும் வரு கிறபடியினு லிந்தப் பாவகன்மமவசியஞ் சர்வாத்மனு விட்டுவிடவேண்டிய சித்தம்.

இப்படியே புண்ணிய கன்மங் காமியார்த்தமா கச் செய்வானேயாகிற் சுவர்க்கலோகப் பிராப்தியும் தேவத்துவதும் மேற்கீழ்ப் போகிறதும் வருகிறதும் ஹானிவிருத்திகளும் லாபாலாபங்களுஞ் ஜநநமரண ங்களும் வருகிறபடியினு லிந்தக் காமியார்த்தமான புண்ணிய கன்மங்களையுஞ் சர்வாத்மனு விட்டு விட வேண்டியது சித்தம்.

இப்புண்ணியகன்மம் பகவத் பிரீதியாகப் பண் ணினுனிட்காமமாம்.

இந்நிட்காம புண்ணியத் துவாராசித்த சுத்தி வரும். இச்சித்தசுத்தித்துவாரா சற்குருலாபங்கிடை க்கும். இச்சற்குருலாபத்துவாரா சிரவண முண்டா ம். இச்சிரவணத்துவாரா மனனமுண்டாம். இம்மன

னத்துவாரா நிதித்தியாசமுண்டாம். இந்நிதித்தியாசத்துவாரா சமாதிஞான முண்டாம். இந்தஞானத்துவாரா மோட்ச மடைவார்க ளாதலாற் புண்ணிய கன்மங்களை நிட்காமமாயவசியஞ் செய்ய வேண்டியது சித்தம்.

ஈஷணாத் திரத்தியாக மாவது தனத்தி னிடத்தும் புத்திர னிடத்துந் தாரத்தி னிடத்து மிருக்கின்ற விச்சையை நீக்குதலாம்.

இவ்விதமான விபரதியை யவசியம் பண்ணவேண்டியது சித்தம்.

திதீட்சையாவது-சுகதுக்கங்கள் வரிற் பொறுத்திருத்தலாம். அஃதாவது-தான் சம்பாதித் திருக்கிற புத்ரமித்ர களத்ராதியான சகல பதார்த்தங்களும் செவ்விதாயிருந்தாற் சுகம், அப் பதார்த்தங்களுக் கோர் விக்கினம் வந்தாற் றுக்கம், இச்சுகதுக்கங்கள் லாபாலாபங்கள் மானாவமானங்கள் செயாபசெயங்கள் தன்னையொருவர் வாதிக்கிற் றுன் தண்டிப்பதற் கதிகார மிருந்தும் பொறுத்த லிவைமுதலானவைகளிற் சகித்திருப்பதாம்.

இத்திதீட்சை பண்ணுமற்போனால் இதமேதாங தங்களிலகப்பட்ட அநேக வநர்த்தங்களு மநேகபாபங்களு மநேக சாஞ்சல்யங்களுந் தேகசோஷணைகளும் பெரியோர்கள் சஹவாசத்துக்கு விக்கினங்களு மவர்கள் சொல்லும் வசனங்கள் மனதிற் றரியாமல் போகிறது மிவைமுதலான தோஷங்கள் அநேகமிருக்கிறபடியினால் இப்பொறுமை ரூபமா யிருக்கப்பட்ட திதீட்சையவசியம் பண்ணவேண்டியது சித்தம்.

சமாதானமாவது-சபேந்திரியங்களையுஞ் சிரவணத்தி னிறுத்தல். அஃதாவது-பெரியோர்க ளிடத்திற்சேர்ந்து சிரவணம் பண்ணுகிற காலத்தின் மனதுமிந்திரியங்களும் வாசனைவசத்திற் செல்லாமற் றிரும்பிச் சிரவணத்தின்பேரிலே சாத்திரமாக நிறுத்தலாம். இதைப்பண்ணுமற்போனாற் பெரியோர்கள் வசனிக்கும் வசனங்கள் மனதிற் பிடிபடாமல் விஷயங்களிற் சென்றுகொண் டிருக்கும். அதனாற் பெரியோர்கள் சொன்னதிற் பயனில்லாமற் றானினைத்திருக்கிற காரியமு மாகாமல் உபயப் பிரஷ்டத்துவ்மு வரும். அதனா லநேக துக்கப் பிராப்திகளுண்டா மதனால் மோட்சத்துக்கு விக்கினங்கள் வருகிறபடியினா

லினிச்சமாதானம் அவசியம் பண்ணவேண்டியது சித்தம.

சிரத்தையாவது பத்தி விசுவாசமென விரண்டாம்.

அவையாவன - தாய்தந்தை முதலானவர்களிடத்திலிருக்கிற பிரியங்களெல்லாஞ் சற்குரு வேதாந்த வாக்கியங்களிடத்தி லேகாக்கிரமாக வைப்பது விசுவாசமும், ஈஸ்வரனிடத் தேகாக்கிரமாக வைப்பது பத்தியுமாம்.

இவற்றில் சற்குருவினிடத்தின் மிகவும் விசுவாசம் பண்ணவேண்டியது. ஏன்பண்ணவேண்டிய தென்றால், அவர் மகிமை முன்னதாக நிரூபிக்கிறோம்.

அஃதாவது-பிராந்தி ரகிதராயும், பரிபூரணராயும், ஞானம்பத்தி வைராக்கிய சம்பன்னராயும், நிரந்தர சந்தோஷத்தை யடைந்தவராயும், நித்திய திருப்தி, யடைந்தவராயும், சச்சிதானந்தப் பிரமஸ்வரூபராயும், தேசாகால வஸ்துப் பரிச்சேதரகிதராயும், சுசாதிவிசாதி சுகதபேத ரகிதராயும், சட்பாவ விகாரரகிதராயும், சுத்தபுத்த முத்த நித்திய பரமானந்தஸ்வரூபராயும், சர்வபரிபூரண கருணைசாகரராயும், நிருபா[illegible]ச்

சிய, நிர்லேப, நிர்ச்சங்க, நிர்வாண, நிட்காம, நிரூப நிரந்தர, நிர்வயவ, நிர்விசேஷானந்த, நிரூபததிரவ, நிபத்த, நிர்வேத்திய, நிர்க்குண, நிரஞ்சன, நிச்சல, நிட்பிரபஞ்ச ஸ்வரூபராயும், அச்சேத்திய, அக்கிலே த்திய, அசோஷிய, அதாகிய, அசல, அவாச்சிய, அநா மய, அட்சர, அப்பிரமேய, அசிந்திய, அந்நியமாகிய, அகீகுரோத, அவிதர்க்கிய, அதிரிசிய, அநாசிரய, அநாதார, ஆனந்த, அகண்டாகார ஸ்வரூபராயும், விஸ்வதைச் சபிராஞ்ஞைக் கதீதமான பிரத்தியைக் குசைதன்னியராயும், இராட்டிரணியகர்ப்ப வவ்வியா கிருதங்களையறிகின்ற சர்வ சாட்சியராகியும், மூலப் பிரகிருதி யகண்டாகார விருத்தியானந்த விருத்திய தீதராயும், கிருத கிருத்தியராயும், ஸ்வரூப ஞானமில் லாதமூடர் மதமூத்திர பாத்திரமா யிருக்கப்பட்ட தேகமேநானென்றிந்தச் சரீரத்தைக் குறித்து வந்த ஹானி விருத்திகளும் சாதிவர்ணம் - குலம்-கோத்தி ரம்-ஆசிரமம்-நாமமும்-வேஷமாதிகளும் சநந மரணங்க ளும் நானென்று கொண்டிருக்கிறவர்களாய்ச் சங்கற் பவிகற்பமாயிருக்கிற மனதை நானென்று கொண்டி ருக்கிறவர்களாய்ச் உச்சுவாச நிசுவாச மாயிருக்கின்ற பிராணவாயுவை நானென்று கொண் டிருக்கிறவர்க

ளாய் ஆபாசமா யிருக்கிற சீவனே நானென்றுகொண்டிருக்கிறவர்களாய்ச்சசவிஷாணம்போலிருக்கிறசூனியமே நானென்று கொண்டிருக்கிறவர்களாய இவை முதலான அநேக மதஸ்தர்களும் திரிசியங்களாய்ப் பரிச்சின்னங்களாய்ச் சர்வயவங்களாய் அனர்த்தசடதுக்க ரூபங்களாய் அஞ்ஞான முதலான கேந்திரிய பிராண புத்தியோ நானென்றுகொண்டிருக்கிறவர்களாய் லோக காமியா யிருக்கப்பட்ட சீவனே நானென்று கொண்டு கிஞ்சிஞ்ஞர்களாய்ச் சுத்தமூடசிரோமணியா யிருக்கிற பேர்கள்கூட நிரேதுகமாய் சற்குருவினுடைய வீக்ஷணத்துக்குப் பாத்திரமானர்களாகில் அவ்வீட்சணதிசயத்தினுற் சர்வகன்மவிமுத்தர்களாய் அவர்களிடத்திற் சேருவார்கள். அப்படிச் சேர்ந்தவர்களுடைய பாவங்களும், ஜநநமரணரூபங்களா யிருக்கிற சகல பிராந்திகளும், சூனியம்பண்ணித் தங்களைப்போலக் கிருத்தியர்களாய்ப் பண்ணுகிறவராயு மிருப்பதாயும்,

சுலோகம்.

బహవో గురవస్సంతి శిష్యవిత్తాపహారకాః [illegible]
భూలోయం గురుర్దేవశిష్యహృత్తాపహారకః॥

இதனதுபோநள்.

சீடனதுகைப்பொருள் பறிக்கும்படியான வாசாரியர் வெகுபேருண்டு. அச்சீடனது மனத்தின்கண்ணுள்ள துன்பத்தைப் பறிக்கும்படியான வாசாரியர் கிடைப்ப தரிது.

இப்படிக்குச் சாஸ்திரங்களிற் பிரமாணங்களிருக்கிறபடியினலு மிங்ஙனங் கிடைப்பதற்கரிய சற்குருவினிடத்தி னவசிய மிகவும் விசுவாசம் வைக்கவேண்டியது சித்தம்.

இப்படியே வேதாந்தசாஸ்திரத்தினிடத்திலு மவசிய மிகவும் விசுவாசம்பண்ணவேண்டியது. ஏன்பண்ணவேண்டிய தென்றால், வேதாந்த சாஸ்திரங்களிலு மகா மகிமைக ளிருக்கின்றபடியினல், அம் மகிமையென்னவென்றால், அவ்வேதாந்த சாஸ்திரங்கள் சகல பிராந்திகளேயுஞ் சூனியம் பண்ணுகிறதாகியும் ஜநந மரண மென்கிற சம்சார சாகரந் தாண்டுகிறதற்குத் தெப்பமாகியும் ஸ்வகாம குணசால மென்கிற மேகங்களைப் போக்கடிக்கிற பிரசண்ட வாயுவாகியும் ஆதியாத்மீகமாதி பவதிகாதி தெய்வீக மென்கிற தாபத்திரயாக்கினிகளைச் சாந்தி பண்ணுகிற அமிர்தவருஷ

மாகியும் புத்திரமித்திர களத்திர பசுப்பிறத்தியக்கிர கக்கிராமக்ஷேத்திர தன்தானியாதிகளிடத்திற் பிரிய மோதப் பிரமோத்மா யிருக்கின்ற வஞ்ஞானமான மோகாந்தகாரத்தைப் போக்கடிக்கிற சூனியப் பிர காசமாகியும் தாணத்திரய சங்கத்திரய பந்தத்திரய சிவத்திரய சக்தித்திரய விந்துத்திரய தெய்வத்திரய கர்மத்திரய காரணத்திரய வாசுனாத்திரயமான விவ் விலங்குகளைப் பேதிக்கிற வச்சிராயுதமாகியும் இதர மான சப்தமீமாம்ச மந்திரகர்மயோக நியாய மிவை முதலானசாத்திரங்கள் படித்துஞ் சுகதுக்கயோ கர் மபந்த சநந மரணங்களை நிரசனம் பண்ணமாட்டா மற் சமுசயங்களோடு கூடி யநேக மயக்கங்களினுன் மோட்சமாகிற கரையைக் காணுமலு மிருக்கிறபோர் கள்கூட தெய்வாதீனமாய் வேதாந்த சாத்திரசிரவ ணம்பண்ணினலது சகல சமுசயங்களையுஞ் சகல பய துக்க மோகாதிகளையுந் தள்ளி மோட்ச கதியைக் காண்பிக்கிறதா யிருக்கிறபடியினலு மிந்த வேதாந்த சாத்திரங்களின் பேரின் மிகவும் விசுவாசம்பண்ண வேண்டியது சித்தம்.

இப்படியே ஈஸ்வரனிடத்திலு மவசியம் மிகவும் பத்தி பண்ணவேண்டியது. ஏன் பண்ணவேண்டு

தென்றால், சகலத்திற்கும் காரணராயும் ஸர்வமும் கர்மமும் நாமமும் ரூபமும் குணங்களு மில்லாமல் உற்பத்திஸ்திதி லயம் பண்ணுகிற நிமித்தம் நிசமாயையினுற் சீவசகத்துக்களை விஸ்தரிக்கிறவராயும் அச்சீவ சகத்துக்களி லனுசூதராயும் அவ்வியாகிருத இரணியகர்ப்ப விராட்டு பிரமா விஷ்ணு மகேஸ்வர ராமக்ருஷ்ணாதி யவதாரராயும் சத்குரு ரூபங்களாயுமிருக்கின்றபடியினு லந்த ஈஸ்வரனைக்குறித்துச்சிரத்தாபத்தியோடும் உபாசனை பண்ணினு லதனு லீஸ்வரானுக்கிரக முண்டா யவ்வனுக்கிரகத்தினுற் சகல பாவங்களும் நசித்து மோக்ஷத்தை யடைகிறார்களாதலாலிந்த வீஸ்வரனிடத்தி லவசிய மிகவும் பத்திபண்ணவேண்டியது சித்தம்.

இப்படிக் குரு வேதாந்தவாக்கிய மீஸ்வரனிடத்தின் மிகவும் விசுவாசம் பண்ணுமற்போனுற் ஜநநமரணப்பிரவாகரூபமான சம்சாரத்துக்கமென்கிறநரகந்தப்பாமலும் அஞ்ஞானமும் அவிவேகமும் அபிமானமும் இராக கர்ம சரீரதுக்க பயாதிகளு மிவை முதலான சகல பிராந்திகளுஞ்சூனியமாகாமலுமிருக்கின்றபடியினு லவசியம் சற்குரு வேதாந்த வாக்கிய

மீஸ்வர ஸீவர்களிடத்தின் மிகவுஞ் சிரத்தாபத்தி பண்ணவேண்டியது சித்தம்.

இங்ஙனம் சமதமாதி குணங்களையுடைய சமாதி சட்க சம்பத்தியான மூன்றுஞ் சாதனங்கைவந்தாற் போதாதோவென்றாற் போதாது. ஏன் போதாதென்றால், சிலர்தாம் ஞானியெனவும் யோகியெனவும் குருக்களெனவும் பாரம் பரியமான பெரியோர்கள் வம்சத்திற் பிறந்தவரெனவுஞ் சொல்லிக்கொண்டு முன்னுள்ள மகான்கள்பேரை வைத்துக்கொண்டு அவர்கள் மகாமகிமையுள்ள குணாதிசயங்கள் தங்களுக்கிருக்கிறதுபோலச் சமதமாதிகளை வரவழைத்துக்கொண்டு நிர்வியாசமாகச் சாந்தாதி குணங்களையடைந்து மோக்ஷமெப்போது வருமென்கிற விசாரமில்லாமற் சோம்பு மயக்கஞ் சமுசய மிவைகளையுடையவராய்த் தேக சவுக்கியத்துக்காக வதற்குத்தகுந்த புசிப்பின் மிகவும் விருப்பமுள்ளவராய் விசித்திரமார்க்கங்களை யப்பியாசித்துக்கொண்டு ஞானம்போலச்சிலவார்த்தைகளைக் கற்றுக்கொண்டு ஆத்மானந்தத்தை யடையாமன் மூடசிரோமணியா யிருப்பார்களாதலால் நான்காஞ் சாதனமான முமுட்சுத்

துவமுமவசியஞ் சம்பாதிக்க வேண்டியது. அஃதாவது மோக்ஷ விருப்பமாம். அதையும் நிரூபிக்கிறோம்.

ஜநநமரணப் பிரவாகரூபமான சமுத்திரத்திலிருக்கிறபேர் தாபத்திரங்களி லடிபட்டிந்தச் சம்சாரம் மகாரவுரவாதி நரகத்தைக் காட்டியு மதிகதுக்கமாயிருக்கிறபடியினு லிச்சம்சாரத்தில் க்ஷணமாத்திரமாகிலு மிருக்கலாகாதென்று மகாபயத்தை யடைந்திப்படிப்பட்ட கோரமான சம்சாரபயதுக்க மோகப்பிரமைகளைப் போக்கடித்து நித்த சுத்த புத்த முத்த சத்திய பரமானந்தானந்தாத்துவித சுகஸ்வரூபமா யிருக்கப்பட்ட சாம்பிராச்சியத்தை எந்தப் பெரியோர்களா லடையலாகுமோ? இப்படிப்பட்ட சற்குரு வெங்கே யிருக்கிறரோ? இதற்கென்ன சாதனங்கள் வேண்டுமோ மென்கிற விசாரத்தோடுந்தலையினெருப்புப் பற்றினவனுக்கும் நாக்கு வரண்டுபோனவனுக்குந் தண்ணீரைக்கண்டாலொழிய ஒருகாரியத்திலுமனது மீளாததுபோல எப்போது மோக்ஷம் வரப்போகிறதென்றெடுத்த விடாய்தீராமற் கிருதகிருத்தியனுமளவும் விசாரத்தினுற் றவித்துக்கொண்டிருக்கிறதே முமுட்சுத்துவமென்று சொல்லப்படும்.

இந்தமுமூட்சுத்துவ மில்லாவிட்டாற் ஜநநமரண மென்கிற நரகம்விடாது. பந்தமும் போகாதானபடி யினு லெவ்விதத்தினு முமூட்சுத்துவஞ் சம்பாதிக்க வேண்டியது சித்தம்.

இச்சாதனங்களுள்ளவனே பிரமவிசாரத்துக் கதிகாரியாவன். அவ்விசாரமாவது சட மின்னதென்றறிந்து அதை நீக்கிச் சத்தையறிகிறதற்குச் சற்குரு தரிசனமா யவரிடத்தின் மகாவாக்கிய உபதேசம் பெற்றுக்கொண்டு வேதாந்தமகா வாக்கியார்த்த நிச்சயமான சீவபர வைக்க நன்றாக விசாரித் தவைக ளொன்றான வனுபவமுண்டாக விசாரிப்பதே விசாரணையாம்.

அஃது வேண்டுமென்பதற்குத் திட்டாந்தம். பசிக் கன்னம் வேண்டினவனுக் கதற்குச் சாதனமான இடம் விறகுபாத்திரம் சலம் அரிசி இவைக ளிருகினும் பசியைப் போக்கடிக்கமாட்டாது. இவைகளுடனே அக்கினி யொன்று கூடினு லவ்வரிசியை யன்னமாகப் பாகம் பண்ணி யச்சாதனங்களுடனே தானும் நட்டமாய்ச் சாடராக்கினி ரூபமா யிருந்து கொண்டு முன்பாகம் பண்ணின வன்னத்தைப் புசித் துப் பசிநீங்கி யச்சாடராக்கினியுந் திருத்தியாகாமல்

யெப்படிச் சுகமாயிற்றோ? அப்படியே ஆத்மவிசார மென்னு மக்கினி பிறந்து குருவென்கிற விடத்தில் வியாபித்து வேதாந்த சாத்திர மென்கிற விறகினாற் பிரகாசித்து மானிட சன்ம மென்கிற பாத்திரத்திற் சாந்தகுணமென்கிற சலத்திற் சையோகமாய் அறி வென்கிற அரிசியைப் பாகம்பண்ணி அவ்விசாராக்கினி முன்னுள்ள சாதனங்களோடு கூட்டமாய்த் தான் சமைத்தான் சமைத்த பூரணமான வன்னத் தைப் புசித்து ஜநந மரணமென்கிற துக்கமான பசி நீங்கித் தனக்கெதிரிலாத வத்து விதானந்த திருப்தி யை யடைந் தத்திருப்தியினாற் சலத்தி லுண்டான வுப்புச் சலாகாரமாவதுபோல ஞானானந்தத்தி லுண் டான விசாரமும் ஞானானந்தாகாரமாய் மோட்ச மடையவேண்டுமாதலா லச்சாதன சதுஷ்டயமுள்ள வர்க் கிவ்விசாரமவசியம் பண்ணவேண்டியது சித்தம்.

சாதனசதுஷ்டயப் பிரகரணம் சம்பூரணம்.

மூன்றவது,

# தூலப் பிரகரணம்.

முதற்பிரகரணத்திற் சித்தசுத்திக்குச் சுதந்தரமாம் சாதன சதுஷ்டயத்திற் றிரிசியரூபமான பிரபஞ்சமனைத்தும் அநித்திய மெனவும் திருக்குரூபமான பிரமம்நித்திய மெனவும் அறிவித்தவ்வனித்தியத்தை நீக்கி யிந்நித்தியத்தை யடைவதற்கேதுவான குணங்களோடு முத்தி விருப்பத்தை வருவித்துப் பின்னிப் பூதபவுதிகமான பிரபஞ்சமுண்டான கற்பனைகளைத் தெரிவித் தவைகளை நீக்குதற் பொருட்டு முன்பு தூலப்பிரகரணம் நிரூபிக்கிறார்.

சுலோகம்.

మృగతృష్ణాయా ముదకం శుక్తౌ రజతంభుజంగ మోర
జ్జ్వామ్ । మయిలసతిచంద్రయుగవద్భ్రాంత న్నిఖిలం జగ
ద్రూపమ్॥

## இதனதுபொருள்.

கானலிடத்திற் சலம்போலவுஞ் கிளிஞ்சலி னிடத்தில் வெள்ளிபோலவும் பழுதையினிடத்திற் பாம்பு போலவுஞ் சந்திரனிடத்திற் றுவேதத்தியம் போலவும் என்னிடத்திற் சகல பிரபஞ்சமும் பிராந்தமாகக் காண்கிறது. இங்ஙன மிருக்கிறபடியால்.

மருமரீசிகையினிடத்திற் ஜலப்பிராந்தி யெப்படியோ சுத்தியினிடத்தில் இரசிதப்பிராந்தி யெப்படியோ இரச்சுவினிடத்திற் சற்பப்பிராந்தி யெப்படியோசந்திரனிடத்திற் றுவிதப்பிராந்தி யெப்படியோ நிட்பிரபஞ்சஸ்வரூபமான தன்னிடத்தின் மூலப்பிரகிருதிமகத்துவம் அகங்காரதத்துவம் பஞ்சதன்மாத்திரை சூட்சுமம்தூலம் இவைமுதலான சகத்பிராந்தி தோன்றுகிறது. இந்தச் சகத்பிராந்தியத்திறைற் றோன்றுகிறதென்றால் அதிஷ்டானஞ்ஞானத்திறைற் றோற்றுகிறது. இப்படித் தோற்றுகிற சகத்பிராந்தி, மருமரீசிகையினிடத்திற் சலங்காலத்திரயத்திலு மெப்படியில்லையோ சுத்தியினிடத்தில் வெள்ளிகாலத் திரயத்திலு மெப்படியில்லையோ இரச்சுவினிடத்திற் சர்ப்

பங்காலத்திரயத்திலு மெப்படி யில்லையோ-சந்திரனி டத்திற்றுவிதங் காலத்திரயத்திலு மெப்படியில்லை யோ அப்படியே நிட்பிரபஞ்ச ஸ்வரூபமான தன்னி டத்தி லதிட்டானுஞ்ஞானமென்கின்ற மூலப்பிரகிரு திமகத்துவம் அகங்கார தத்துவம் பஞ்சதன் மாத் திரை சூட்சுமம் தூலமாதியான சகத்பிராந்தி காலத் திரயத்திலு மில்லவேயில்லை அஃதில்லாமற்போன பிரகார மெப்படியென்றுற் கிரமமாகச் சொல்லுகி ரோம்.

சுலோகம்.

సచ్చిదానందస్వరూపేస్వాత్మన్యారోపితంవపుః । స్థూ
లంతస్యస్వరూపంతుతావత్రనిరూప్యతే॥ ౭

இதனதுபொருள்.

சச்சிதானந்த ஸ்வரூபமான தன்னிடத்தில் தூல சரீரம் ஆரோபிக்கப்பட் டிருக்கிறது. அதனது ஸ்வ ரூபமானது நிரூபிக்கப்படுகிறது.

சுலோகம்.

అస్థిస్నాయుం నత్వచో నాడీ రోమచైవయథాతథా। క్షితిః
పంచవిధాప్రోక్తాస్వకాంశాఃపరికీర్తితాః॥ ౮

இதனதுபொருள்.

அஸ்தி-மர்ம்ம-சர்மம்-நரம்பு-உரோமம்-ஆகப்பிருதிவியம்சம் ஐந்து.

(இதற்கு விபரம்) பிருதிவி, யிடத்திற் பிருதிவி அஸ்தி. பிருதிவி யிடத்திலப்பு மாமிசம். பிருதிவி யிடத்தி லக்கினிசர்மம்-பிருதிவியிடத்தில் வாயு நரம்புகள். பிருதிவியிடத்தி லாகாசம் உரோமங்க ளிந்தவைந்தும் பிருதிவியின் கூறு..

சுலோகம்.

లాలామూత్రాతథాస్వేదః శుక్లశోణితమేవచ । అప
పంచవిధాః ప్రోక్తాస్సమాంశాః పరికీతితాః॥ ౯

இதனதுபொருள்.

வாய்நீர்-மூத்திரம்-வியர்வை-உதிரம்-சுக்கிலம் ஆக அப்புவினம்சம் ஐந்து.

(இதற்கு விபரம்) அப்புவினிடத்திற் பிருதிவி வாய்நீர் - அப்புவினிடத்தி லப்பு மூத்திரம். அப்புவினிடத்தி லக்கினி வியர்வை. அப்புவி னிடத்தில் வாயு வுதிரம் அப்புவினிடத்திலாகாசஞ் சுக்கிலம். இந்தவைந்து மப்புவின்கூறு.

சுலோகம்.

క్షుధాతృష్ణాతథా నిద్రా ఆలస్యంసంగమ స్తథా । అ
గ్నిఃపంచవిధఃప్రో క్తస్సమాంశాఃపరికీర్తితాః॥ ౧౦

இதனதுபோருள்.

பசி-தாகம்-நித்திரை-சோம்பல்-சங்கமம் ஆக அக்கினியினம்சம் ஐந்து.

(இதற்கு விபரம்.) அக்கினியினிடத்திற் பிருதிவி பசி அக்கினியினிடத்தி லப்புதாகம் அக்கினியி னிடத்தி லக்கினி நித்திரை. அக்கினியினிடத்தில் வாயுவாலஸ்யம் அக்கினியினிடத்தி லாகாசஞ் சங்கமம். இந்தவைந்து மக்கினியின்கூறு.

சுலோகம்.

ధావనంవల్గనంచైవకుంచనంచప్రసారణమ్ । వాయుః
పంచవిధఃప్రో క్తస్సమాంశాఃపరికీర్తితాః॥ ౧౧

இதனதுபோருள்.

ஓடுதல்-சுருங்குதல்-குறுகுதல்-விரிகுதல்-கிடத்தல் ஆக வாயுவினம்சம் ஐந்து.

இதற்குவிவரம்.

வாயுவினிடத்திற் பிருதிவிகிடத்தல். வாயுவினிடத்திலப்புநடத்தல். வாயுவினிடத்தி லக்கினி யிருத்தல். வாயுவி னிடத்தில் வாயுவோடல். வாயுவினிடத்திலா காசந்தத்தல். இந்தவைந்தும்வாயுவின்கூறு.

சுலோகம்.

రాగద్వేషభయంలజ్జా మోహశ్చైవ యథాతథా।
నభఃపంచవిధఃప్రోక్తంసమాంశాఃపరికీర్తితాః॥ ౧౨

இதனதுபொருள்.

இராகம்-துவேஷம்-பயம்-வெட்கம்-மோகம - ஆக வாகாசாம்சம் ஐந்து.

(இதற்குவிவரம்) ஆகாசத்தி னிடத்திற் பிருதிவி ஆசை. ஆகாசத்தி னிடத்திலப்பு துவேஷம். ஆகாசத்தினிடத்தி லக்கினிபயம். ஆகாசத்தினிடத்தில் வாயு வெட்கம். ஆகாசத்தினிடத்திலாகாசம் மோகம். இந்தவைந்து மாகாசத்தின்கூறு.

ஆகவிந்த விருபத்தைந்து தத்துவங்களுங் கூடித் தூலசரீரமாமிவை யுண்டானவிபரஞ் சொல்லப்பட்டது.

இந்தத்தூலசரீரத்தினிடத்தி லிந்திரியங்க ளிருக்கிற வவயவஸ்தானங்களின் விபரம். பிருதிவியினிடத்திலாகாசமாங்காரம். ஸ்தானமிருதயம். பிருதிவியினிடத்தில் வாயுவு பிராணவாயுவு. ஸ்தானமிருதயம். பிருதிவியினிடத்தி லக்கினி கிராணேந்திரிய. ஸ்தானம் நாசிபிருதிவியினிடத்தி லப்புகந்தகன் மாத்திரை. பிருதிவியினிடததிற் பிருதிவி குதேந்திரியம். ஸ்தானம் குதம்.

**சுலோகம்.**

అహంచ[ప్రాణవాయుశ్చ నాసికాగంధమేవచ । పా
యుపంచవిధ[ప్రోక్తః ఇత్యేతద్భూమిపంచకమ్॥ ౧౩

**இதன்துபொருள்.**

இந்த அகங்காரம் பிராணவாயு கிராணேந்திரியம் கந்தவிஷயம் குதேந்திரியம் ஆகவைந்தும் பிருதிவிபஞ்சிகிருதி.

அப்புவினிடத்திலாகாசஞ் சித்தம். ஸ்தானம் நாபி. அப்புவினிடத்தில் வாயு அபானவாயு ஸ்தானங்குதம். அப்புவினிடத்தி லக்கினி சிருவை பிந்திரியும். ஸ்தானஞ் சிசுவை. அப்புவினிடத்திலப்புரசதன் மாத்

திரை. அப்புவினிடத்திற் குருதிவி கர்மேந்திரியம் ஸ்தானம் குய்யம்.

சுலோகம்.

చిత్తంచాపానవాయుశ్చజిహ్వారసమేవచ। గుహ్యాపం
చవిధఃప్రోక్తః ఇత్యేతజ్జలపంచకమ్॥ ౧౪

இதனதுபொருள்.

இந்தச் சித்தம் அபானவாயு சிகுவை யிந்திரியம் இரசவிஷயம் குய்யேந்திரியம் ஆகலைந்தும் அக்கினி பஞ்சிகிருதி.

அக்கினியினிடத்திலாகாசம் புத்தி. ஸ்தானம் நேத்திரம். அக்கினியினிடத்தில்வாயு உதானவாயுவு. ஸ்தானங்கண்டம். அக்கினியினிடத்திலக்கினி நேத்திரேந்திரியம். ஸ்தானம் நேத்திரம். அக்கினியினிடத்திலப்பு ரூபதன்மாத்திரை. அக்கினியினிடத்திற் பிருதிவி பாதேந்திரியம். ஸ்தானம்பாதம்.

சுலோகம்.

బుద్ధిశ్చోదానవాయుశ్చనేత్రంరూపంతథైవచ। పాణి
పంచవిధఃప్రోక్తః ఇత్యేతద్వహ్నిపంచకమ్॥ ౧౫

இதன்துபொருள்.

இந்தப்புத்தி உதானவாயு நேத்திரேந்திரியம் ரூப விஷயம் பாதேந்திரியம் ஆகவைந்தும் அக்கினி பஞ்சிகிருதி.

வாயுவினிடத்திலாகாசம் மனது.ஸ்தானங் கண்டம். வாயுவினிடத்தில் வாயுவுவியானவாயு.ஸ்தானம் சர்வ சரீரம். வாயுவினிடத்தி லக்கினி தொக்கேந்திரியம். ஸ்தானந்தொக்கு. வாயுவினிடத்தி லப்பு பரிசதன் மாத்திரை. வாயுவினிடத்திற் பிருதிவிபாணீந்திரியம். ஸ்தானம் அஸ்தம்.

சுலோகம்.

మానసం వ్యానవాయుశ్చ చర్మస్పర్శే స్తథైవచ
పాదపంచవిధః ప్రోక్తః ఇత్యేతద్వాయుపంచకమ్॥ ౧౬

இதனதுபொருள்.

இந்தமனதுவியானவாயு தொக்கேந்திரியம் பரிச விஷயம்பாணீந்திரியம் ஆகவிந்த வைந்தும் வாயுவு பஞ்சிகிருதி.

ஆகாயத்தினிடத்தி லாகாசம் ஞானம். ஸ்தானம் புருவ மத்தியம். ஆகாசத்தினிடத்தில் வாயுவுசமான

வாயுவு. ஸ்தானம் நாபி. ஆகாசத்தினிடத்தி லக்கினி சுரேத்தி ரேந்திரியம். ஸ்தானஞ் செவி. ஆகாசத்தினிடத்திலப் புசத்ததன்மாத்திரை. ஆகாசத்தினிடத்திற் பிருதிவிவாக்கேந்திரியம். ஸ்தானம்வாக்கு.

சுலோகம்

జ్ఞానంసమానవాయుశ్చ శ్రోత్రంశబ్దస్తథా వచః। వాక్ పంచవిధః ప్రోక్తః ఇత్యేతత్సోమపంచకమ్॥ ౧౭

இதனதுபொருள்.

இந்தஞானம் சமான வாயு சுரேத்திரேந்தியம் சத்தவிஷயம் வாக்கிந்திரியம் ஆகவிந்தவைந்து மாகா.

இந்த விந்திரியங்க ளிருக்கிற ஸ்தானமான தூல சரீரம் பஞ்சிகிருதி பஞ்சமகா பூதங்களினலானது. இதற்குச்சம்மதிவசனம்.

சுலோகம்.

పంచీకృతమహాభూతసంభవంకర్మసంచితం। శరీరం సుఖదుఃఖానాంభోగాయతనముచ్యతే॥ ౧౮

பஞ்சிகிருத பஞ்சமகா பூதத்தினின்று முண்டாகி யும் கர்மசஞ்சிதமாயும் சுக துக்கங்களுக் கிடமாயு மிருக்கின்றது தூலசரீரமென் றுசாரியசுவாமிகளாத் மபோதமென்கிற கிரந்தத்தி னிரூபித்திருக்கிறு ரான படியினுலுஞ் சுருதிகளிற் சொல்லப்பட்டிருக்கிறபடி யினுலு மிதுவே பிரமாணம்.

தன்னிடத்தி லத்தியஸ்தமாய்த் தோற்றுகிற வித் தப்பஞ்சி கிருத பஞ்சமகா பூதங்களினுற் கற்பித மான வித்தூலசரீரந்தானல்ல. அஃதெப்படித்தானல் லவென்றுல் இந்த அஸ்தி மாமிசம் சருமம் நரம்பு உரோமம் இந்த வைக்தையு மறிந்த வறிவேதான். தன்னுலறியப்பட்ட விந்தவைந்துந் தன்னை யறியமா ட்டாவாகையாற்சடம் இந்தவைந்துந்தானல்ல- இந்த வைந்தும் பிருதிவியினம்சமாம். இந்த வைந்தினு டைய ஹானிவிருத்திகளினுல் வருகிற சுக துக்கங் கள் தனக்கில்லை. இந்தவைந்துமேதானுனு லிந்தவைந் தும்போனுற்முன் போகவேண்டுமே? இந்த வைந்தும் போனுலுந் தான்போகவில்லையே? ஆகையாலிவ் வைந் துக்குஞ் சாட்சியாயறிகிற வறிவே தான்.

இப்படியே வாய் நீர்-மூத்திரம்-வியர்வை - உதிரம் சுக்கிலம் இந்தவைந்தையுமறிந்தவறிவேதான். தன்னு லறியப்பட்ட விந்தவைந்துந் தன்னை யறியமாட்டா. ஆகையாற்சடம் இவ்வைந்துந்தானல்ல. இந்தவைந் தும் அப்புவினம்சமாம். இந்தவைந்தினுடைய ஹானி விருத்திகளினுல் வருகிற சுகதுக்கங்கள் தனக் கில்லை. இவ் வைந்துமேதானுனல் இந்த வைந்தும் போனல் தான் போகவேண்டுமே? இந்தவைந்தும் போனுலுந் தான் போகவில்லையே? ஆகையாலிந்த வைந்துக்குஞ் சாட்சியாயறிகிறவறிவே தான்.

இப்படியே-பசி தாகம்-நித்திரை-ஆலஸ்யம் - சங்க மம் இந்தவைந்தையு மறிந்தவறிவேதான். தன்னுலறி யப்பட்ட விந்தவைந்துந் தன்னை யறியமாட்டாவா கையாற்சடம்.

இந்தவைந்துந்தானல்ல. இந்தவைந்து மக்கினியி னம்சமாம். இந்தவைந்தினுடைய ஹானிவிருத்திகளி னுல் வருகிற சுகதுக்கங்கள் தனக்கில்லை. இந்தவைந் துமேதானுனலிந்த வைந்தும் போனல் தான் போக வேண்டுமே? இந்தவைந்தும் போனுலுந்தான் போக

வில்லையே? ஆகையாலிந்த வைந்துக்குஞ் சாட்சியாய றிகிற வறிவேதான்.

இப்படியே கிடத்தல் நடத்தல் இருத்தல் ஓடல் தத்தல் இந்தவைந்தையு மறிந்தவறிவேதான். தன்னு லறியப்பட்ட விந்தவைந்துந் தன்னை யறியமாட்டா. ஆகையாற் சடம். இந்த வைந்துந்தானல்ல. இந்த வைந்தும் வாயுவினம்சமாம். இந்தவைந்தினுடைய ஹானி விருத்திகளினுல் வருகிற சுகதுக்கங்கள் தனக் கில்லை. இந்தவைந்துந்தானுன லிந்த வைந்தும் போ னுல் தான் போகவேண்டுமே? இந்த வைந்தும்போனு லுந் தான் போகவில்லையே? ஆனபடியினுலிந்த வைந் துக்குஞ் சாட்சியாயறிகிற வறிவே தான்.

இப்படியே ஆசை-துவேஷம்-பயம்-வெட்கம்-மோ கம் இந்தவைந்தையுமறிந்த வறிவேதான். தன்னுலறி யப்பட்ட விந்தவைந்துந் தன்னை யறியமாட்டாவா கையாற் சடம். இந்தவைந்துந்தானல்ல. இந்தவைந்து மகாசத்தினம்சமாம்.

இந்தவைந்தினுடைய ஹானிவிருத்திகளினுல் வரு கிறசுகதுக்கங்கள் தனக்கில்லை இந்தவைந்துந் தானு னுலிந்த வைந்தும் போனுல் தான் போகவேண்டுமே?

இந்த வைந்தும் போனாலுந்தான் போகவில்லையே? ஆனபடியாலிந்தவைந்துக்குஞ் சாட்சியா யறிகிறவறிவே தான்.

இந்தப்பிருதிவிபஞ்சகமும் அப்புபஞ்சகமும் அக்கினிபஞ்சகமும் வாயுபஞ்சகமும் ஆகாச பஞ்சகமுமாகிய விவ்வைந்து பஞ்சகங்களுங்கூடி தூலசரீரமாயிற்று.

இதைத் தூல சரீரமென்றறிந்தவறிவேதான். தன்னாலறியப்பட்ட விந்தத்தூலசரீரந்தன்னை யறியமாட்டாவாகையாற்சடம். இந்தத்தூலசரீரந்தானல்ல,இந்தத் தூலசரீரம் பஞ்சிகிருதபஞ்சமகா பூதங்களினாலாவது. இந்தத் தூலசரீரத்தினுடைய ஹானிவிருத்திகளினால் வருகிற சுகதுக்கங்கள் தனக்கில்லை. இந்தத்தூலசரீரமே தானானாலிந்தத் தூலசரீரம் போனால் தான் போகவேண்டுமே? இந்தத் தூலசரீரம் போனாலுந்தான் போகவில்லையே? எப்படித்தான் போகவில்லையென்னிற் பூருவத்திற்றான் சரீரத்தோடிருந்து பண்ணின தருமத்தினாற் றனக்கிந்தச் சரீரம்வந்ததென்றும்,இந்தச் சரீரத்தினாற் பண்ணின கருமத்தினாற் றனக்கினிமேற் சரீரம் வரப்போகிறதென்று

மிந்தச் சரீரத்திற்கு விலட்சணமான தன்னையறிந் தாற்றனக்கினிமேற் சரீரம் வராதென்று மனுபவ மிருக்கிறபடியாற் பூதபவுஷிய வர்த்தமானகாலத்திர யங்களிலுமிந்தச் சரீரமிருந்தாலும் போனாலுந் தான் போகவில்லையே? ஆனபடியினாலிந்த வியஷ்டி தூலசரீ ரந் தானல்ல, இந்தவியஷ்டி தூலசரீரத்துக்குச் சாட் சியா யறிகிற வறிவேதான். இதற்குச் சம்மதிவசனம்.

சுலோகம்.

నత్వేవాహంజాతు నాసంత్వంనేమేజనాధిపా। నచై వనభవిష్యామస్సర్వేయమతఃపరం॥ ౧౯

இதனதுபொருள்.

நானொருக்காலு மிராமலிருந்தவனல்ல, நீயுமிராம லிருந்தவனல்ல. இந்தவிராசாக்களு மிராமலிருந்தவ ர்களல்ல நாமெல்லாருமேலில்லாமற் போகிறவர்களு மல்லவென்று கீதையிற்பகவா னிருபித்திருக்கிறார்.

சுலோகம்.

ఘటద్రష్టాఘటాద్భిన్నః సర్వదానఘటోయథా। దే హద్రష్టాతథాదేహోనాహమిత్యవధారయ॥ ௨௦

இதனதுபொருள்.

கடத்தைகாண்கிறவன். கடத்துக்கு வேறாய்க் கடமாகாததுபோலத் தேகத்தைக் காண்கிறதானுந்தேகமல்லவென்றறிக, என்றாசாரிய சுவாமிகள் வாக்கியவிருத்தியென்கிற கிரந்தத்தி னிருபித்திருக்கிறாரானபடியினா லிதுவே பிரமாணசித்தம்.

இந்தவியஷ்டி தூல சரீரத்துக்குச் சாட்சியான தானே பிர்மாதிபிபீலி காந்தமான சமஷ்டி தூல சரீரங்களிலும் பஞ்சீகிருத பஞ்சமகா பூதங்களென்கிற தூசி பூதங்களிலு மனுசூதமா யிருந்துகொண்டு சாட்சியா யறிகிறபடியினா லிந்தச் சமஷ்டி தூலசரீரங்களுக்குக் காரணமான பஞ்சீகிருத பஞ்சமகா பூதங்களென்கிற தூல பூதங்களுந் தானல்ல. எப்படித்தானல்லவென்னிற் றனக்செதிரே தோற்றுகிறசமஷடிவியஷ்டி யாத்மகமான தூலசரீரங்க ளிடத்திலு மிதற்குக்காரணமான பஞ்சீகிருத பஞ்சமகா பூதங்களென்கிறவீல பூதங்க ளிடத்திலும் அத்தியஸ்தமாய்த் தோற்றுகிற விசுவன் வியாவகாரிகனும் விராட்வைஸ்வானரனு மென்கின்ற வபிமான நாமங்களும் சாக்கிராவஸ்தையும் நேத்திரஸ்தானமும் யுத்தபோ

கமும் அகாரமாத்திரையும் இரசோ குணமும் கிரியா சத்தியும்பிரமமூர்த்தியும் அன்னமயகோசமும் சீவத்துவமும் மனுஷயத்துவமும் நான் கர்ப்பஸ்தனைப் பிறந்தவன், நான்பாலன், நான்குமாரன், நான்யுவன் நான்விருத்தன், நான்சீரணித்துப் போகிறவனென்னு மிச்சட்பாவ விகாரங்களும் சடாதாரமென்கிறநாமங் களும் இலட்சியத்திரயங்களென்கிற நாமங்களும் நான்புருஷன், நான்ஸ்திரீ, நான் நபும்சகனென்கிற லிங்கத்துவமும்நான்பிராமணன், நான்க்ஷத்திரியன், நான் வைசியன், நான் சூத்திரனென்கிற வர்ணத்துவமும், நான்றமிழன், நான்றெலுங்கன், நான்கர்னடன், நான் மராஷ்டகன், நான் குர்ச்சரனென்கிற பஞ்சதிராவிடங்களும், நான்காசிப கோத்திரம், நான் பரத்வாச கோத்திரம், நான்போதாயன சூத்திரம், நான் ஆசிலாயன் சூத்திரம், நான் காத்தியாயன் சூத்திரமென்கிற கோத்திரசூத்திரங்களும், நான் பிரமசாரி, நான் கிரகஸ்தன், நான் வானப்பிரசித்தன், நான் சந்நியாசி என்கிறஆச்சிரமங்களும், நான்கிருஷ்ணன், நான் இராமன், நான்எல்லம்பட்டன், நான்குப்பாப்பட்டனென்கிற குறிநிர்மங்களும் நான்கறுத்தவன், நான் சிவத்தவனென்கிற ரூபங்களும், நான்தீட்சதன், நான்சோம

யாகி,நான் பிரிதிவி வசந்தயாகி,நான் மஹா விரதயாகி, நான் பவுண்டரீகயாகி என்கிற சமஸ்காரநாமங்களும் நான்மாயாவதி, நான் தத்துவவாதி யென்கிற மத நாமங்களும் நான் வாத்தியார், நான் கர்மடன், நான் பத்தன், நான்ஞானி, நான் கலியாணப்பிள்ளை யென்கிற வாசாரநாமங்களும் நான்தச்சன்,நான்தட்டான், நான்கொல்லன், நான் குசவன், நான் அம்பட்டன், நான்வண்ணான், நான் இடையனென்கிற விருத்திநாமங்களும் நான் கூலிக்காரன், நான் காஸ்தாரி, நான் மாவுத்தன்,நான்மணியக்காரன், நான்கணக்கப்பிள்ளை யென்கிற கிரியாநாமங்களுமானவனுடைநாமங்களும் பிர்மாவிஷ்ணு மகேஸ்வரன் சூரியன் நட்சத்திரம் தேவகந்தருவசித்தசாத்திய கின்னர கிம்புருஷ குய்யக அப்ஸரவித்தியாதர யட்சராட்சத பூதப்பிரேத பிசாச சாகினிடாகினி வேதாளாதிதாம்பிர மிருண மயசிலாதாரு ரூபங்களென்கிற தேவநாமத்துவமும் கோ இடப அசுவகார்த்தபசிங்க சார்த்தூல சிவான மார்ச்சார மக்கடாதி மிருகநாமங்களும் கருடன் மச கமாதிபட்சி நாமங்களும் பன்னகாதிஊர்வன நாமங்களும் மச்சகூர்மாதி நீர்வாழ்வன நாமங்களும் கற்

பகம் மந்தாரம் பாரிசாதம் நாளிகேரம் தாளி அசு வத்தாதி விருட்ச நாமங்களும் மகாமேரு சித்திர கூடம் திரிகூடம் சத்தகுலபர்வதாதி பர்வத நாமங்க ளும் சுவர்க்கமத்தியபாதாளாதி சதுர்த்தசபுவனங்க ளும் நவகண்டஞ்சத்ததீபங் குருக்ஷேத்திரங் காசி க்ஷேத்திரந் துவாரகாக்ஷேத்திர முதலான புண்ணிய க்ஷேத்திராதி பிருதிவி நாமங்களும் சத்த சமுத்தி ரம் கங்கையமுனை சரஸ்வதி துங்கபத்திரா கோதா வரி கிருஷ்ணா காவேரி முதலிய புண்ணிய தீர்த்தாதி சகல நாமங்களும் வடவானலம் ஆஹவானலம்காரு கபத்தியம்தருணக்கினி அக்கினிஹோத்திரம் சட ராக்கினியாதியான அக்கினி நாமங்களும் மலையமாரு தமென்கிற வாயுவு நாமங்களும் அசரீர அவகாசதச திக்குப்பஞ்சாகாசம் வெளியென்கிற ஆகாச நாமங் களும் இந்தத் தூலப்பிரபஞ்சத்தைக் குறித்துச் சொல்லப்பட்ட சத்தசாஸ்திரம் தர்க்க சாத்திரம் மீமாம்ச சாஸ்திரம் யோக சாஸ்திரம் வேதாந்த சாஸ்திரங்களுமிவைமுதலானவிந்த வியஷ்டிசமஷ்டி தூலப் பிரபஞ்சத்தின் மேற்றோற்றுகிற சகலவித்தி யாசங்களும்,இதற்காதாரமான தூலப்பிரபஞ்சமும், சசவிஷாண வந்தியாபுத்திர ககுைரவிந்த ர்நீந்தியா

புருஷன்போலவே காலத்திரயத்திலேயுந் தனக்கில்லை அஃதெப்படியெனில் - அஸ்திமரங்களைக் குறித்துத் தூலமென்று சொல்லுவோமென்றால் வைகட்கு வெவ்வேறு நாமங்களிருக்கிற படியினாலும், அவயவங்களைக் குறித்துத் தூலங்களென்று சொல்லுவோமென்றால், அவயவங்களுக்கு வெவ்வேறு நாமங்களிருக்கிறபடியினாலும், குட்டை நெட்டையைக் குறித்துத் தூலங்களென்று சொல்லுவோமென்றால், குட்டை நெட்டைகளுக்கு வெவ்வேறு நாமங்களிருக்கிறபடியினாலும், பஞ்சிகிருத பஞ்சமகா பூதங்களைக் குறித்துத் தூலங்களென்று சொல்லுவோமென்றால், பஞ்சிகிருத பஞ்சமகா பூதங்களுக்கு வெவ்வேறுநாமங்களிருக்கிறபடியினாலும், அந்தப் பஞ்சமகா பூதங்கள் சத்ததன்மாத்திரையை வினா ஆகாசமில்லை. சத்தபரிச தன்மாத்திரை வினாவாயுவில்லை. சத்தபரிசரூபதன் மாத்திரையை வினா அக்கினியில்லை. சத்தபரிச ரூபரச மாத்திரைைவினா அப்புவில்லை. சத்தபரிச ரூபரசகந்த தன்மாத்திரையைவினா பிருதிவியில்லை. ஆனபடியினா லிந்தப் பஞ்சிகிருத பஞ்சமகாபூதங்கள் அபஞ்சீ கிருதமான பஞ்சீதன்மாத்திரையைத் தவிரவில்லை ஆதலாலிந்த அபஞ்சீகிருதமா

னபஞ்சதன்மாத்திரைகளிடத்தி லத்தியஸ்தமானது க்கெதிராகத்தோற்றுகிற பஞ்சமகாபூதங்களென்கிற தூலபூதங்களு மிதனுடைய காரியமான பிரமாதி பிபீலிகாந்தமான சமஷ்டி வியஷ்டி தூல சரீரங்களும் இதன்மேல் அத்தியஸ்தமான நாமங்களு மிதைக் குறித்துவருகிற ஆபாசங்களும் சசவிஷாண வந்தியாபுத்திர ககனாரவிந்த மித்தியாபுருஷன்போலவே காலத்திரயத்திலுந் தனக் கில்லவேயில்லை. இதற்குச் சம்மதிவசனம்.

இத்தூல சரீரத்தின்பேரில் அத்தியஸ்தமாய்த் தோற்றுகிற பிராமணத்துவஞ் சரீரத்தைக் குறித்து சொல்லுவோ மென்றால் சரீரம் க்ஷத்திரியர்களுக்கிருக்கிறபடியினாலும், குடுமி பூணூலைக் குறித்துச் சொல்லுவோ மென்றால், அக்குடுமி பூணூல் மண்ணுடையானுக் கிருக்கிறபடியினாலும் அவயவங்களைக்குறித்துச் சொல்லுவோ மென்றால், அவ் வவயங்களுக்கு வெவ்வேறு நாமங்க ளிருக்கிறபடியினாலுந் தாய்தகப்பன் பிராமணனை படியினா லவர்களைக் குறித்துச் சொல்லுவோ மென்றால், தாய்தகப்பனுண்டானை நகதந்தகேசமல மூத்திரங்களுக்கும் பிராமணத்துவம் வரவேண்டும், அப்படி வரவில்லை

ஆதலா லிந்தப் பிராமணத்துவாதி நாமங்கள் பிள்ளைகள் விளையாட்டினாற் பெயர்வைத்துக் கொண்டாற்போலச் சொல்லப்பட்டதே யல்லாமற் பரமார்க்கமாகக் காலத் திரயத்திலுந் தனக்கில்லையென்று விவேகசாரமென்கிற கிரந்தத்தில் வாசுதேவ சுவாமியார் நிரூபித்திருக்கிறதும், பூபாலகா விருட்சத்திற் றுருவுண்டாயிற்று. தாருவிற் பல்லக்குண்டாயிற்று. இஃது விருட்ச மென்றுந் தாருவென்றும் பெயரில்லை. சனங்க ளுன்னைப் பல்லக்கிலேறி வருகிறானென்று சொல்லுவார்களே யல்லாமல் இராசா விருட்சத்தின் பேரிலேறிவருகிறா னென்றும் தாருமேலேறி வருகிறானென்றும் ஒருவருஞ் சொல்லவில்லை. பல்லக்குத் தாருவினாற் பண்ணப்பட்டதே யல்லாமல் வேறல்ல. அந்தத் தாருவினைப் பிரத்தியேகமாய் விவரித்துப் பார்த்தா லதற்குப் பல்லக்கென்கிற பேருண்டோவென்று விசாரியும். அதுவுமல்லாம லிந்தக் குடையிருக்கின்றதே அஃது தநேகமூங்கிற் பிளாச்சுக்களினாற் குறுக்கு நெடுக்குமாகப் போட்டுக் கட்டிக்குடையென்று சொல்லப்பட்டுக்கொண் டிருக்கின்றது.

இந்தப் பிளாச்சுக்களைப் பிரத்தியேகமா யெடுத்து விவகரித்துப் பார்த்தா லது குடையென்றெப்படிச் சொல்லப்படும்.

இப்படியே பஞ்சபூதங்களுடைய பரிணாம விசேஷத்தினாலுஞ்சரீரமென்று மென்சரீர மென்றும் விவகரிக்கப் படுகிறது.

பூர்வகர்ம சங்கியமான தேகங்களிற் பிரவேசித்த சீவனை ஸ்திரீயென்றும் புருஷனென்றும் யானையென்றும் குதிரை யென்றும் பசுவென்றும் பட்சியென்றும் வினமாகப் படுகிறது.

இஃது இலௌகீகப் பார்வையினாலல்லாமற்பாரமாதிகமான பார்வையில்லை. அந்த வறிவேஸ்வரூபமான ஆத்மா யட்சராட்சசர்கள் முதலான தேவமனுஷிய பிராமண க்ஷத்திரிய வைசிய சூத்திரஜாதிகளும் பசுமிருக பட்சியாதிக ளென்கிற நாமங்களும் ஆத்மாவுக்குக் கர்மசங்கியமே யல்லாமற் சுபாவமாயில்லை: ஆனபடியினால் னிப்படிப் பட்டவனென்றெப்படிச் சொல்லப்படும். இராசாவென்றும் சேவகனென்றும் வன்னியனென்றும் விவகரிக்கப் படுகிற வஸ்துவெல்லாம் அசத்தென் றறியவேண்டும்.

எந்த வஸ்துவாகட்டுங் காலாந்தரத்திற் பிறவியாய்ப் பேரிடப் படுகின்றதோ அந்த வஸ்துவுக்குச் சத்தென்று சொல்லப்படாது. நீயொருவனே தேசத்

துக் கரசனென்றும் தகப்பனுக்குப் பிள்ளையென்றும் சத்துருவுக்குப் பகையாளியென்றும் பெண் சாதிக்குப் புருஷனென்றும் குமாரனுக்குத் தகப்பனென்று மிப்படிச் சொல்லப்படுகிறபோது உன்னை யாரென்று நிச்சயிக்கலாம். ஓ இராசாவே! நீயாவது தலையோ? வயிறோ? கையோ? காலோ? இந்த வயவயங்களுக்குப் புறம்பான சூட்சும புத்தியினு லுன்னை யாரென்று விசாரித்துப்பார். இப்படி தத்துவநிச்சய மாயிருக்க இதரவித்தையினு லாத்மாவை இப்படிப் பட்டதென் றெப்படிச் சொல்லலா மென்று விஷ்ணுபுராணத்தில் விப்பிரோத்தமரான சடபரதர் சவ்வீர மகிபாலராஜாவுக் குபதேசம்பண்ணி யிருக்கிறதும் சத்ததன்மாத்திரியைத்தவிர ஆகாசமில்லை: சத்தப்ரிசதன் மாத்திரியைத் தவிர வாயுவில்லை. சத்தபரிசரூபதன்மாத்திரியைத்தவிர அக்கினியில்லை. சத்தபரிச ரூபரசதன்மாத்திரியைத்தவிர அப்புவில்லை. சத்தபரிசரூப ரசகந்ததன்மாத்திரியைத் தவிர பிருதிவியில்லை. என்றுத்மாநாத்ம விவேகமென்கிற கிரந்தத்திற் சங்கராசாரிய சுவாமிகள் நிரூபித்திருக்கிறதும் பிரமாணமாம். இதுவேசித்தம்.

தூலப்பிரகரணம் சம்பூரணம்.

நான்காவது

# சூட்சுமப்பிரகரணம்

முற்பிரகரணத்திற் பஞ்சீகிருத பஞ்சமஹாபூதங்களையும் சமஷ்டி வியஷ்டி யாத்மமான சரீரங்களையும் இதன்மேற் கற்பிதமான ஆயாசங்களையுமுடைய தூலசரீரந் தானன்றென நியதிபண்ணி இதற்குக் காரணமான சூட்சும சரீரமுந் தானல்லவென்று நீக்குதற்பொருட்டுத் தன் ஸ்வரூபம் நிரூபிக்கிறார்.

சுலோகம்.

సచ్చిదానందస్వరూపేస్వే త్మేన్యారోపితంవపుః। సూక్ష్మంతస్యస్వరూపంతు తావత్త్రనిరూప్యతే॥ ௨௦

இதனதுபொருள்.

சச்சிதானந்த ஸ்வரூபமான தன்னிடத்தி லாரோபிக்கப்பட்டது சூட்சுமசரீரம். அதன் ஸ்வரூபம் நிரூபிக்கப் படுகின்றது.

அஃதெப்படியெனில் சத்ததன்மாத்திரை சாத்விகாம்சஞ் சமஷ்டியிற் கூடினது ஞானம். சத்ததன்மாத்திரை இரசோம்சஞ் சமட்டியிற்கூடினது சமானவாயு. சத்ததன்மாத்திரை வியஷ்டி சாத்விகாம்சஞ் சுரோத்திரேந்திரியம். சத்ததன்மாத்திரை விஷயம். சத்ததன்மாத்திரை வியஷ்டிரசோம்சம் வாகிந்திரியம். இந்தஞானஞ் சமானவாயு சுரோத்திரேந்திரியஞ் சத்விஷயம் வாகிந்திரியம். இந்த வைந்தையுஞ் சத்ததன்மாத்திரியைத் தவிரவில்லை. பரிசதன்மாத்திரை சாத்விகாம்சஞ் சமஷ்டியிற்கூடினது மனது. பரிசதன்மாத்திரை. இரசோம்சஞ்சமஷ்டியிற்கூடினது வியானவாயுவு. பரிசதன்மாத்திரை வியஷ்டி சாத்விகாம்சந் தொக்கேந்திரியம். பரிசதன்மாத்திரை விஷயம். பரிசதன்மாத்திரைவியஷ்டி இரசோம்சம்பாணீந்திரியம். இந்தமனது வியானவாயு தொக்கேந்திரியம் பரிசவிஷயம் பாணீந்திரியம் இந்தவைந்தும் பரிசதன்மாத்திரையைத் தவிரவில்லை. ரூபதன்மாத்திரை சாத்விகாம்சஞ் சமஷ்டியிற் கூடினது புத்தி. ரூபதன்மாத்திரை. இரசோம்சஞ் சமஷ்டியிற்கூடினது உதானவாயு. ரூபதன்மாத்திரை வியஷ்டி சாத்விகாம்சம் நேத்திரேந்திரியம். ரூபதன்மாத்திரை விஷயம். ரூப

தன்மாத்திரை வியஷ்டி இரசோம்சம்பாதேந்திரியம். இந்தப்புத்தி உதானவாயு நேத்திரேந்திரியம் ரூபவிஷயம் பாதேந்திரிய மிந்தவைந்தும் ரூபதன்மாத்திரையைத்தவிரவில்லை. இரசதன்மாத்திரை சாத்விகாம்சஞ் சமஷ்டியிற் கூடினது சித்தம்.

இரசதன்மாத்திரை ரசோம்சஞ் சமஷ்டியிற் கூடினது அபானவாயு. இரசதன்மாத்திரை வியஷ்டி இரசோம்சஞ் சிகுவேந்திரியம். இரசதன்மாத்திரை விஷயம். இரசதன்மாத்திரை வியஷ்டி இரசோம்சங்குய்யேந்திரியம். இந்தச்சித்தம் அபானவாயு சிகுவேந்திரியம்ரசவிஷயங் குய்யேந்திரியம் இந்தவைந்தும் இரசதன்மாத்திரையைத்தவிரவில்லை. கந்ததன்மாத்திரை சாத்விகாம்சஞ் சமஷ்டியிற்கூடினது அகங்காரம். கந்ததன்மாத்திரை இரசோம்சஞ் சமஷ்டியிற் கூடினது பிராணவாயு. கந்தன்மாத்திரை வியஷ்டி சத்விகாம்சங்கிராணேந்திரியம். கந்ததன்மாத்திரைவிஷயம். கந்ததன்மாத்திரைவியஷ்டி இரசோம்சங்குதேந்திரியம். இந்தவகங்காரம் பிராணவாயு கிராணேந்திரியம் கந்தவிஷயம் குதேந்திரிய மிந்தவைந்துங் கந்ததன்மாத்திரையைத் தவிரவில்லை. இந்தவாக்காதி கன்மேந்திரியங்களைந்தும் சத்தாதிவிஷயங் களைந்தும் சுரோத்

திராதி ஞானேந்திரியங்களைந்தும் பிராணாதிவாயுக்க ளைந்தும் ஞானம் நீங்கலாகக் காமனாதியந்தக் கரணங் களுன்குமாக விந்த விருபத்துநாலுங்கூடிச் சூட்சும சரீரமாயிற்று. இதற்குச் சம்மதி வசனம்.

சுலோகம்.

పంచప్రాణమనోబుద్ధిః దశేంద్రియసమన్వితం। అపంచీకృతభూతోత్థం సూక్ష్మాంగం భోగసాధనం॥ ౨౨

இதனதுபொருள்.

பஞ்சப்பிராணனும் மனமும் புத்தியும் ஞானே ந்திரியங்களுங் கன்மேந்திரியங்களுஞ் சூட்சும சரீர மென்று பெயர். இப்படி ஆசாரிய சுவாமிக ளாத்ம போத மென்கிற கிரந்தத்தினிரூபிக்கிறு ரானபடியி ஞனிதுவே பிரமாணசித்தம்.

ஆனு லாசாரிய சுவாமிக ளாத்ம போதமென் கிற கிரந்தத்திற் சூட்சுமசரீரம் பதினேழு தத்துவ மென்று நிரூபித்திருக்க, இருபத்துநான்கு தத்துவ மென் றெப்படிச் சொல்லப்படு மென்றால், மனதிற் சித்தத்தையும் புத்தியி லாங்காரத்தையு மடக்கிப் பஞ்ச விஷயங்களையும் நீக்கிப் பதினேழாகக் கூறி

ஞர். யாமிந்தச் சித்த மகங்கார மிவைகளின்குணம் வெவ்வேறே யிருக்கின்ற படியினு லிவ்விரண்டை யுஞ் சூட்சுமசரீரத்துக்குக் காரணமான பஞ்சதன் மாத்திரைகள் விஷயரூபமாகத் தோன்றுகிற பஞ்ச தன்மாத்திரைகளைத்தவிர சூட்சுமசரீர மிராதானப டியினு லிந்தவிஷயங்க ளோந்தையுமாக வேழையுங் கூட்டிச் சூட்சுமசரீர மிருபத்துநாலென்று சொன் னது சித்தம்.

இப்படியே தன்னிடத்தி லத்தியஸ்தமாய்த் தோற் றுகிற பஞ்சதன் மாத்திரையினுலான விந்தச் சூட்சு மசரீரந்தானல்ல. இந்தச் சூட்சுமசரீரத்தை யறிந்த ஞானமேதான். அஃதெப்படி யென்னில் வாக்குப் பாணிபாதம் குய்யம்சூதங்க ளென்கிற கன்மேந்திரி யங்களுக்கு வசனதான கமன ஆனந்தவிசர்க்கமான விஷயங்க ளுண்டாயிருந்தாலும் இந்தச் சுரோத்தி ரேந்திரியஞ் சத்தவிஷயத்தினுல் வாகிந்திரியத்திற் கறிகிறது. தன்னு லறியப்பட்ட விந்த வாகிந்திரியந் தன்னை யறியமாட்டா தாகையாற் சடம். இந்தவாகி ந்திரியந் தானல்ல. இவ்வாகிந்திரியஞ் சத்ததன்மாத் திரை வியஷ்டி சாத்விகாம்சத்தினு லானது. இதன் ஹானிவிருத்திகளினுல் வருகிற சுகதுக்கங்க டனக்

கில்லை. இந்தவாகிந்திரியந் தானானால் இந்தவாகிந்திரியம்போனாற் றான்போக வேண்டுமே? இந்த் வாகிந்திரியம் போனாலுந் தானப்படிப் போகவில்லையே? ஆகையாலிந்த வாகிந்திரியத்துக்குச் சாட்சியா யறிந்த சுரோத்தி ரேந்திரியமேதான். இப்படியே தொக்கேந்திரியம் பரிசவிஷயத்தினாற் பாணீந்திரியததுக் கறிகிறது. தன்னாலறியப்பட்ட விந்தப் பாணீந்திரியந் தன்னை யறியமாட்டாதாகையாற் சடம்.

இந்தப் பாணீந்திரியந்தானல்ல. இந்தப் பாணீந்திரியம்பரிசதன்மாத்திரைவியஷ்டி இரசோம்சத்தினாலானது. இந்தப் பாணீந்திரியத்தினுடைய ஹானிவிருத்திகளினால் வருகிற சுகதுக்கங்க டனக்கில்லை. இந்தப் பாணீந்திரியமே தானானா லிந்தப் பாணீந்திரியம் போனாற் றான்போகவேண்டுமே? இந்தப் பாணீந்திரியம் போனாலுந் தான்போகவில்லையே? ஆகையினாலிப் பாணீந்திரியத்துக்குச் சாட்சியாயறிந்த தொக்கேந்திரியமேதான். இப்படியே நேத்திரேந்திரியம் ரூபதன்மாத்திரையினாற் பாதேந்திரியத்துக் கறிகிறது. தன்னா லறியப்பட்ட பாதேந்திரியந் தன்னை யறியமாட்டாதாகையாற் சடம்.

இந்தப் பாதேந்திரியந்தானல்ல. இந்தப்பாதேந்திரியம் ரூப்தன்மாத்திரை வியஷ்டி இரசோம்சத்திலானது. இந்தப் பாதேந்திரியத்தினுடைய ஹானிவிருத்திகளினால் வருகிற சுகதுக்கங்கடனக்கில்லை இந்தப் பாதேந்திரியமே தானானா லிந்தப் பாதேந்திரியம் போனாற் றான் போகவேண்டுமே? இந்தப் பாதேந்திரியம் போனாலுந்தான் போகவில்லையே? ஆனபடியினாலிந்தப் பாதேந்திரியத்துக்குச் சாட்சியா யறிந்த நேத்திரேந்திரியமேதான். இப்படியே சிகுவேந்திரியம் இரசவிஷயத்தினாற் குய்யேந்திரத்தை யறிகிறது. தன்னா லறியப்பட்ட குய்யேந்திரியந் தன்னை யறிய மாட்டா தாகையாற் சடம்.

இந்தக் குய்யேந்திரியந்தானல்ல. இந்தக் குய்யேந்திரியம் இரசதன்மாத்திரை வியஷ்டி இரசோம்சத்திலானது. இந்தக்குய்யேந்திரியத்தினுடைய ஹானிவிருத்திகளினால் வருகிற சுகதுக்கங்க டனக்கில்லை. இந்தக் குய்யேந்திரியமே தானானா லிந்தக் குய்யேந்திரியம் போனாற் றான் போகவேண்டுமே? இந்தக் குய்யேந்திரியம் போனாலுந் தான்போகவில்லையே? ஆனபடியினா லிக்குய்யேந்திரியத்துக்குச் சாட்சியாயறிந்த சிகுவேந்திரியமேதான். இப்படியே கிராணேந்திரியங்

கந்தத மாத்திரை யிறைற் குதேந்திரியத்தைத் யறிகிறது. தன்னை லறியப்பட்ட குதேந்திரியந் தன்னை யறியமாட்டா தாகையாற் சடம்.

இந்தக் குதேந்திரியா தானல்ல இந்தக் குதேந்திரியம் கந்ததன்மாத்திரை வியஷ்டி இரசோமசத்தினாலானது. இந்தக்குதேந்திரியத்தினதுஹானிவிருத்திகளினால் வருகிற சுகதுக்கங்க டனக்கில்லை. இந்தக் குதேந்திரியமே தானானை லிந்தககுதேந்திரியம போனாற் றான் போகவேண்டுமே? இந்தக் குதேந்திரியம் போனாலுந் தான் போகவில்லையே? ஆனபடியினால் லிந்தக் குதேந்திரியததுக்குச சாட்சியா யறிந்த ஸ்ரோணேந்திரியமேதான். இந்தச் சுரோத்திரம் தொக்கு சட்சு சிகுவாகிராண மென்கிற ஞானேந்திரியங்கள சத்த - பரிச - ரூப - ரச - கந்தன் மாத்திரைகளினால் - வாசகு - பாணி - பாதம - குய்யம - குத்தங்களென்கிற கன்மேந்திரியங்களை யறிகிறது தன்னாலறியப்பட்ட கன்மேந்திரியங்கள் தானல்ல. இந்தக கன்மேந்திரியங்கள் பஞ்சதன்மாத்திரைவியஷ்டி இரசோம்சத்தினாலானது. ஆகையா லிந்தக் கன்மேந்திரியங்களுடைய ஹானிவிருத்திகளினால்வருகிற சுகதுக்கங்களுனக்கில்லை. அந்தக் கன்மேந்திரியங்களே தானானை

விந்தக் கன்மேந்திரியங்கள் போனாற் றான் போக வேண்டுமே? இந்தக் கன்மேந்திரியங்கள் போனாலுந் தான் போகவில்லையே? ஆனபடியினா லிந்தக் கன்மேந் திரியங்களுக்குச் சாட்சியாயறிந்த ஞானேந்திரியங்க ளேதான். இப்படியே சுரோத்திரம் தொக்குசட்சு சிகுவாகிராணங்களென்கிற ஞானேந்திரியங்களுக்குச் சத்தபரிச ரூபரசகந்த தன்மாத்திரைக ளென்கிற விஷயங்க ளுண்டாயிருந்தாலும் அகங்காரம் பிரா ணவாயுவோடே கூடிக் கிராணேந்திரியத்தைப் பற் றிக் கந்தமறிகிறது. இப்பிராணவாயு கிராணேந்திரி யம் கந்ததன்மாத்திரை இந்தமூன்றையு மறிந்த வகங்காரமே தான். தன்னாலறியப்பட்ட விந்தமூன் றுந் தன்னை யறியமாட்டா தாகையாற் சடம்.

இந்த மூன்றுந் தானல்ல. இந்தமூன்றுஞ்சமஷ் டிரசோம்சத்தினாலும் வியஷ்டி சாத்விகாம்சத்தினா லுமானது. இம்மூன்றினுடைய ஹானிவிர்த்திகளி னால் வருகிற சுகதுக்கங்க டனக்கில்லை. இந்த மூன் றுந்தானானா லிந்தமூன்றும் போனாற் றான் போக வேண்டுமே? இந்தமூன்றும் போனாலுந் தான் போக வில்லையே? ஆகையாலிந்த மூன்றுக்குஞ் சாட்சியா யறிந்த அகங்காரமேதான். இப்படியேசித்தம் அபா

னவாயுவோடேகூடி சிகுவேந்திரியத்தைப்பற்றிஇரச த்தையறிகிறது. ஆகையாலிந் த அபானவாயுசிகுவே ந்திரியம் இரசதன்மாத்திரை இம்மூன்றையு மறிந்த சித்தமே தான். தன்னாலறியப்பட்ட இந்த மூன்றுந் தன்னை யறியமாட்டாவாகையாற் சடம்.

இந்த மூன்றுந் தானல்ல. இந்தமூன்றும் இரசோ ம்சசஷ்டியினாலும் சாத்விகாம்ச வியஷ்டியினாலுமா னது. ஆகையாலிந்த மூன்றினுடைய ஹானிவிருத் திகளினால் வருகிற சுகதுக்கங்க ளனக்கில்லை. இந்த மூன்றுமேதானானு லிந்தமூன்றும்போனாற் றான்போ கவேண்டுமே? இந்தமூன்றும் போனாலுந் தான் போக வில்லையே? ஆகையா லிந்தமூன்றுக்குஞ் சாட்சியா யறிந்த சித்தமேதான். இப்படியே புத்தி உதான வாயுவோடேகூடி நேத்திரேந்திரியத்தைப் பற்றி ரூப த்தையறிகிறது. இந்த வுதானவாயு நேத்திரேந்திரி யம் ரூபதன்மாத்திரை இந்த மூன்றையுமறிந்த புத் தியேதான். தன்னாலறியப்பட்ட விந்தமூன்றுந் தன் னையறியமாட்டாவாகையாற் சடம்.

இந்த மூன்றுந் தானல்ல. இந்தமூன்றும் சமஷ்டி இரசோம்சத்தினுலும் வியஷ்டி சாத்விகாம்சத்தினுலுமானது. ஆகையாலிந்த மூன்றினுடைய ஹானி விருத்திகளினுல் வருகிற சுகதுக்கங்க டனக்கில்லை. இந்தமூன்றுமே தானுனு லிந்தமூன்றும் போனுற்றுன் போகவேண்டுமே? இந்தமூன்றும் போனுலுந் தான்போகவில்லையே? ஆனபடியினு லிந்தமூன்றுக்குஞ் சாட்சியாயறிந்த புத்தியேதான்.

இப்படியே மனது வியானவாயுவுடனே கூடித் தொக்கேந்திரியத்தை பற்றிப் பரிசத்தையறிகிறது. ஆகையாலிந்த வியானவாயு தொக்கேந்திரியம் பரிச விஷயம் இந்தமூன்றையு மறிந்த மனமே தான். தன்னுலறியப்பட்ட இந்தமூன்றுந் தன்னை யறியமாட்டாவாகையாற் சடம்.

இந்த மூன்றுந் தானல்ல. இந்தமூன்றும பரிசதன் மாத்திரை சமஷ்டி இரசோம்சத்தினுலும் வியஷ்டி சாத்விகாம்சத்தினுலுமானது. ஆகையாலிந்த மூன்றினுடைய ஹானிவிருத்திகளினுல் வருகிற சுகதுக்கங் கடனக்கில்லை. இந்த மூன்றுமே தானுனு லிந்தமூன்றும் போனுற்றுன்போகவேண்டுமே? இந்தமூன்றும்

போனாற் றான் போகவில்லையே? ஆகையா லிந்த மூன் றுக்குஞ் சாட்சியாயறிந்த மனமே தான்.

இப்படியே ஞானம் சமானவாயுவுடனே கூடிச்சு ரோத்திரேந்திரியத்தைப்பற்றிச்சத்தத்தையறிகிறது. ஆகையால் இந்தச் சமானவாயு சுரோத்திரேந்திரி யம் சத்தவிஷயம் இந்த மூன்றையுமறிந்த ஞான மே தான். தன்னாலறியப்பட்ட விந்தமூன்றுந் தன்னை யறியமாட்டாவாகையாற் சடம்.

இந்த மூன்றுந் தானல்ல. இந்தமூன்றுஞ் சத்த தன்மாத்திரைசமஷ்டி இரசோம்சத்தினாலும்வியஷ்டி சாத்விகாம்சத்தினாலுமானது. ஆகையால் இந்தமூன் றினுடைய ஹானிவிருத்திகளினால் வருகிற சுகதுக் கங்க டனக்கில்லை. இந்த மூன்றுமேதானானால் இந்த மூன்றும்போனாற் றான்போகவேண்டுமே? இந்தமூன் றும் போனாலுந் தான்போகவில்லையே? ஆனபடியினா லிந்தமூன்றுக்குஞ் சாட்சியாயறிந்த ஞானமேதான். இந்தப் பிராணாதிவாயுவுக்களைந்து, சுரோத்திராதி ஞானேந்திரியங்களைந்து, சத்தாதிவிஷயங்களைந்து, ஆகப் பதினைந்தையுமறிந்த ஞானம் மனது புத்தி சித்த மகங்காரங்க ளென்கிற அந்தக் கரணங்

களேதான். தன்னாலறியப்பட்ட விந்தப் பதினைந்துந் தன்னை யறியமாட்டாவாகையாற் சடம்.

இந்தப் பதினைந்துந் தானல்ல. இந்தப் பதினைந்தும் பஞ்சதன்மாத்திரை சமஷ்டி இரசோம்சத்தினாலும் வியஷ்டி சாத்விகாம்சத்தினாலுமானது. ஆகையாலிந்தப் பதினைந்தினுடைய ஹானிவிருத்திகளினால் வருகிற சுகதுக்கங்க ளெனக்கில்லை. இந்தப் பதினைந்துந் தானானா லிந்தப் பதினைந்தும் போனாற் றான் போகவேண்டுமே? இந்தப் பதினைந்தும் போனாலுந் தான் போகவில்லையே? ஆகையாலிந்தப் பதினைந்துக்குஞ் சாட்சியாயறிந்த கரணங்களே தான்.

இப்படியே மனதென்றறிந்த ஞானமேதான். தன்னாலறியப்பட்ட மனது தன்னை யறியமாட்டாதாகையாற்சடம்.

இந்த மனது தானல்ல. இந்தமனது பரிசதன்மாத்திரை சமஷ்டி சாத்விகாம்சத்தினாலானது. இந்தமனதினுடைய ஹானிவிருத்திகளினால்வருகிற சுகதுக்கங்க ளெனக்கில்லை. இந்த மனதேதானானா லிந்த மனதுபோனாற் றான்போகவேண்டுமே? இந்தமனது போனாலுந் தான்போகவில்லையே? ஆகையாலிந்த மனதுக்குச் சாட்சியாயறிந்த ஞானமேதான்.

இப்படியே புத்தியென்றறிந்த ஞானமேதான். தன்னாலறியப்பட்டபுத்தி தன்னை யறியமாட்டாதாகையாற்சடம்.

இந்தப் புத்திதானல்ல. இந்தப்புத்தி ரூபதன்மாத்திரை சமஷ்டி சாத்விகாம்சத்திலானது. ஆகையாலிந்தப் புத்தியினுடைய ஹானி விருத்திகளினால் வருகிற சுகதுக்கங்க ளெனக்கில்லை. இந்தப் புத்தியே தானானாலிந்தப்புத்திபோனாற் றான்போகவேண்டுமே? இந்தப்புத்தி போனாலுந் தான்போகவில்லையே? ஆகையா லிந்தப்புத்திக்குச் சாட்சியாயறிந்த ஞானமேதான்.

இப்படியே சித்தமென்றறிந்த ஞானமேதான். தன்னா லறியப்பட்ட சித்தந் தன்னை யறியமாட்டாதாகையாற் சடம்.

இந்தச் சித்தந் தானல்ல. இந்தச் சித்தம் இரசதன்மாத்திரை சமஷ்டி. சாத்விகாம்சத்திலானது. ஆகையாலிந்தச் சித்தத்தினுடைய ஹானிவிருத்திகளினால்வருகிற சுகதுக்கங்க ளெனக்கில்லை. இந்தச் சித்தமேதானானா லிந்தச் சித்தம்போனாற் றான் போகவே

ண்டுமே? இச்சித்தம்போனலுந் தான் போகவில்லையே? ஆகையா லிந்தச்சித்தத்துக்குச் சாட்சியாயறிந்தஞா னமேதான். இப்படியே அகங்காரமென்றறிந்த ஞானமேதான். தன்னலறியப்பட்ட அகங்காரந்தன் னை யறியமாட்டாதாகையாற் சடம்.

இந்த அகங்காரந் தானல்ல. இந்த வகங்காரங் கந்ததன்மாத்திரை சமஷ்டி சாத்விகாம்சத்தினலா னது. ஆகையா லிந்த வகங்காரத்தினுடைய ஹா னிவிருத்திகளினல்வருகிற சுகதுக்கங்க டனக்கில்லை.. இந்த வகங்காரமேதானனு லிந்தவகங்காரம் போன ற் றுன்போகவேண்டுமே? இந்தவகங்காரம் போன லுந் தான்போகவில்லையே? ஆனபடியின லிந்த வகங் காரத்துக்குச் சாட்சியாயறிந்த ஞானமேதான்.

இந்தமனம் - புத்தி - சித்தம் - அகங்காரங்க ளென்கிற-சமுசய-நிச்சய-சாஞ்சல்லிய -அபிமானங் களையறிந்த ஞானமேதான் - தன்ன லறியப்பட்ட விந்தநாலுந்தன்னை யறியமாட்டா வாகையாற் சடம். இந்தநாலுந் தானல்ல. இந்தநாலும் பரிச - ரூப - ரச-கந்ததன்மாத்திரைகளி னுடைய சமஷ்டி சாத்வி காம்சத்தினலானது: இந்த நாலினுடைய ஹானிவி

ருத்திகளினால்வருகிற சுகதுக்கங்க டனக்கில்லை. இந் தநாளுமேதானை லிந்தநாளும் போனாற் றான்போக வேண்டுமே? இந்தநாளும் போனாலுந்தான் போக வில்லையே? ஆகையால் இந்தநாளுக்குஞ் சாட்சியாய றிந்த ஞானமேதான். வசன தானகமன ஆநந்த விசர்க்க மிவைகளைப் பண்ணுகிற் கிரியாசத்தியான கன்மேந்திரியங்க ளேந்தும், சத்தாதிவிஷயங்க ளேந் தும், இந்த விஷயங்களைக் கிரியாசத்தியான* ஞா னேந்திரியங்களேந்தும், உசுவாச ரூபமான பிராணவா யுவும், நிசுவாசரூபமான அபானவாயுவும், முழுங்கப் படுகிறதுந் தும்முகிறது மிருமுகிறதுங் கண்திறக்கி றது மூடுகிறதுமான வுதானவாயுவும், புசித்தவன் னத்தை வியாபிக்கப் பண்ணுகிற வியானவாயுவும், புசித்த பதார்த்தத்தைச் சமானமாகப்பண்ணுகிற சமானவாயுவும், இப்படிப்பட்ட கிரியாசத்தியான பிராணாதி வாயுக்களைந்தும், இவைகளை யெல்லாமறி கிற வாதக்கரணங்களுமாக விருபத்துநாலுந் தன் னையறியமாட்டா வாகையாலும், போகட்டும் தங்க ளைத்தாங்க ளறிவார்களோ? அதுவு மில்லாதபடியினா லும் ஒருத்தரையொருத்த ரறிவார்களோ? இதுவுமில் லாதபடியினாலுங் கிராகசத்திக் கிரியாசத்திகளாயிருக்

கிறபடியினுலுஞ் சடங்களானபடியினுலும் இந்தவி ருபத்துநான்கு தத்துவங்களும் தானல்ல. இந்தவிரு பத்துநான்கு தத்துவங்களும் பஞ்சதன்மாத்திரை யினுடைய சமஷ்டி வியஷ்டி ராசசசாத்விகாரம்சத்தி ஞலானது. இந்த விருபத்துநான்கு தத்துவங்களினு டைய ஹானிவிருத்திகளினுல்வருகிற சுகதுக்கங்க டனக்கில்லை. இந்த விருபத்துநான்கு தத்துவமுந்தா ஞெ லிந்தவிருபத்துநான்கு தத்துவமும் போனுற் முன் போகவேண்டுமே? இந்த விருபத்து நான்குதத் துவம் போனுலுந் தான்போகவில்லையே? எப்படிப் போகவில்லை யென்று னித்திரையிலிந்த விருபத்து நான்கு மில்லாமற் போனுலுந் தான்காரணுத்மகமா யிருந்துகொண்டு திரும்பவும் விருத்திவந்து விழி த்தவுடன் இந்த விருபத்துநான்கு தத்துவமில்லா மற் சுகமேயிருந்தேனென்று தானிருந்த வனுபவஞ் சொல்லுகிறு ஞனபடியினுலும், இந்த விருபத்துநா ன்கு தத்துவமுந் தானல்ல. இந்த விருபத்துநான்கு தத்துவங்களும் க்ஷேத்திரம். இந்தவிருபத்துநான்கு தத்துவங்களையு மறிந்த ஞானமே க்ஷேத்திரன். இந்த விருபத்துநான்கு தத்துவங்களும் அநாத்மா. இந்த விருபத்துநான்கு தத்துவங்களை யறிந்தவறி

வே ஆத்மா. இந்த விருபத்துநான்கு தத்துவங்களை யுமறிந்தவறிவே புருஷன். இதற்குச்சம்மதிவசனம்.

சுலோகம்.

రూపందృశ్యంలోచనం దృక్ తద్దృశ్యందృక్తుమానసం।
దృశ్యా వృతయస్సాక్షీదృగేవనతుదృశ్యతే॥ ௨௯

இதனதுபொருள்.

ரூபந்திரிஸ்யம் - கண்திருக்கு. அக்கண்திரிஸ்யம் - மனந்திருக்கு. அம்மனந்திரிஸ்யம் - ஆத்மந்திருக்கு. அவ்வாத்மா திரிஸ்யமாகமாட்டாது.

என்று வித்தியாரண்யசுவாமிகள் திருக்குத்திரிசிய விவேகமென்றபடியினாலும், சுருதிகளிற் சொல்லியிருக்கிறபடியினாலும், இதுவே பிரமாண சித்தம்.

இந்த க்ஷேத்திரஞ்ஞனை தானே சமஷ்டிசூட்சும சரீரங்களிலும் இவைகளுக்குக் காரணமான அபஞ்சீகிருதமான பஞ்சதன் மாத்திரைகளிலும் அநுசூதமாயிருந்துகொண்டு சாட்சியாயறிகிறனைபடியினாலும், இந்தச் சமஷ்டி வியஷ்டியான சூட்சும சரீரங்களும் இவைகளுக்குக் காரணமான அபஞ்சீகிருத பஞ்சதன் மாத்திரைகளுந் தானல்ல.

தனக்கெதிராய்த் தோற்றுகிற விந்தச் சமஷ்டிவி யஷ்டியான சூட்சும சரீரங்களிடத்திலு மிவைகட்குக் காரணமான பஞ்சதன்மாத்திரைக ளிடத்திலும் அத்தியஸ்தமாய்த் தோற்றுகிறதைத் தைசதனென்றுஞ் சொர்ப்பன கற்பிதனென்றும் பிராதிபாதிகனென்றும் இரணிய கர்ப்பனென்றும் மஹாப்பிராணனென்றுஞ் சூத்திராத்மா வென்றும் அபிமானத்துவமும் சொர்ப்பனவத்தையுங் கண்டஸ்தானமும் சுயேச்சாபோகமும் உ-கார மாத்திரையும் சாத்விககுணமும் இச்சாசத்தியும் விஷ்ணுமூர்த்தியும் பிராமயகோசமும் மனோமயகோசமும் விஞ்ஞானமய கோசமும், நான்வார்த்தை சொல்லுகிறவன் - நான் தாதா - நான் நடக்கிறவன் - நான்சகல விசர்ச்சனம் பண்ணுகிறவன் - நான் ஊமையன் - நான்நொண்டி - நான் முடவன் - நான் பத்தகோஷ்டன் - நான் பண்டகனென்கிற கன்மேந்திரியங்களுடைய கிரியாவத்தியாசங்களும், நான் கேட்கிறவன்-நான் பரிசிக்கிறவன்-நான் பார்க்கிறவன்-நானுருசியறிகிறவன் - நான் வாசனையறிகிறவன்-நான்செவிடன் - நான் மதத்துப்போயிருக்கிறவன் - நான்குருடன் - நான் உருசியறியாதவன்-நான் மூக்கறையனென்கிற

ஞானேந்திரியங்களுடைய கிராகாத்தியாசங்களும், நான் சீவிக்கிறவன் - நான் சஞ்சரிக்கிறவன் - நான் சத்தியுடையவன்-நான் வீரியமுடையவன் - நான்ப சித்தவனென்றும் - நான் தாகித்தவனென்றும் - நான் வாயுவேகனென்றும் - நான் பலமுடையவனென்றும் - நான் அம்பஸாயான சித்தன் - நான் அடயோகி-நான் லயயோகியென்றும் - நான் கண்திறந்து மூடுகிறவன் நானிருமுகிறவன் - நான் றும்முகிறவன்-நான் கொட்டாவிவிடுகிறவன்-நான் விழுங்குகிறவனென்றும் - நான் வாந்திபண்ணுகிறவன்- நான் சீரணம்பண்ணிக் கொள்ளுகிறவன்-நான் ஏப்பமிடுகிறவனென்றும் - இவை முதலாகிய பஞ்சப்பிராணங்களுடைய கிரியாத்தியாசங்களும், நான் சங்கற்பவர்த்தன் - நான் மனோவேகி - நான்போகி-நான் மந்திரயோகி-நான்சோகி- நான் இராகி-நான்மோகி-நான் துவேஷி - நான்காமி - நான் சமுசயமுள்ளவனென்றும் - நான் யுத்திவந்தன் - நான் விவேகி-நான் மகாபுத்தியுள்ளவன் - நானேகசந்தக்கிராகி-நான் கர்த்தா - நானிச்சயவந்தன் - நான் விருத்தன்-நான் பண்டிதன்-நான் உலோகாந்தரகாமியென்றும்-நான் சஞ்சலன் - நான் சபலன் - நான் சிந்தகனென்றும்-

நானகங்காரி - நானுக்கிரன் - நான் வீரன் - நான்சூ ரன் - நா னபிமானியென்கிற |இவைமுதலான வந் தக் கரணங்களுடைய கிராகாத்தியாசங்களும், உதா த்தம் - அநுதாத்தம் - ஸ்வரிதங்களென்கிற வேத சுரங்களும் - சத்த சுரங்களும் இராககீதங்களும் - பேரி - மிருதங்க - சங்க - பணவ-கோமுகாதி வாத் தியங்களும் - சதுர்வித பேதசத்தங்களும்- இலாப பிரலாப-துர்லாப - பருஷாலாப - காடின்னியாலாப- சோகாதி துக்க சத்தங்களும் - அஷ்டாதச. யாஷை களும் - இவைமுதலான சத்தங்களுடைய வத்தியா சங்களும், சீத - உஷ்ண - மிருது - கடின - தார தன்மியாதி பரிசத்தினுடைய வத்தியாசங்களும், நீ ல-பீத - சுவேத-ரத்த - அரிசனமுதலான தாரதன் மியாதி ரூபத்தினுடைய வத்தியாசங்களும், உப்பு- புளிப்பு-கைப்பு -தித்திப்பு-துவர்ப்பு முதலான இரச தாரதன்மியமானஉருசியினுடையவத்தியாசங்களும், சுகந்த-துர்க்கந்த - மிஸ்ரகந்த - தாரதன்மியாதி வா சனைகளினுடைய வத்தியாசங்களும், இந்தச் சூட்சு மப் பிரபஞ்சத்தைக்குறித்துச் சொல்லப்பட்ட சத்த சாஸ்திர தர்க்கசாஸ்திர மீமாம்ச சாத்திரங்களும், சமஷ்டி வியஷ்டியினுண்டான அநேகவத்தியாசங்

களும், இவைமுதலான விந்தச் சூட்சுமப் பிரபஞ்சத்தின்பேரிற் றோற்றுகிற சகல வத்தியர்சங்களும், இதற்காதாரமான சூட்சுமப் பிரப்ஞ்சமும்,சசவிஷாணவந்தியாபுத்ர ககளுரவிந்தமித்தியா புருஷன்போலவே காலத்திரயத்திலுந் தன்னிடத்திலில்லை. இந்த விருபத்துநான்கு தத்துவங்களைக் குறித்துச் சூட்சுமசரீரமென்று சொல்லுவோ மென்றால், இந்தவிருபத்துநான்கு தத்துவங்களும் வித்திருபமாய் வெவ்வேறு நாமங்க ளிருக்கிறபடியினாலும் ஞானம்-சமானவாயு - சுரோத்திரேந்திரியம் - வாகிந்திரியம் இந்தநான்கு விருத்தியும சத்ததன்மாத்திரையைத் தவிரலில்லாதபடியினாலும், மனது - வியானவாயு-தொக்கேந்திரியம் - பாணிந்திரியம் - இந்தநான்கு விருத்தியும் பரிசதன்மாத்திரையைத் தவிரலில்லாதபடியினாலும், சித்தம் - அபானவாயு -சிகுவேந்திரியம் - குய்யேந்திரியம்- இந்தநான்குவிருத்தியும் இரசதன்மாத்திரையைத் தவிரலில்லாதபடியினாலும்,அகங்காரம் - பிராணவாயு - கிராணேந்திரியம் - குதேந்திரியம் - இந்த நான்குவிருத்தியுங் கந்ததன்மாத்திரையைத் தவிரலில்லாதபடியினாலும், அகங்காரம் -பிராணவாயு - கிராணேந்திரியம் - குதேந்திரியம் இந்த

நான்குவிருத்தியுங் கந்ததன்மாத்திரையைத் தவிர வில்லாதபடியினாலும், இந்தப் பஞ்சதன்மாத்திரைகளைப் பிரத்தியேகமாய் விவகரித்துப் பார்க்குமிடத்தில் அகங்காரதத்துவமென்கிற அவஸ்தையிலத்தியஸ்தமாய்த் தன்னிடத்திலெதிராய்த்தோற்றுகிற அபஞ்சீகிருதமான பஞ்சதன்மாத்திரைகளும் இவைகளுக்குக் காரியமான சூட்சுமப் பிரபஞ்சமும்; இதனிடத்திலத்தியஸ்தமாய்த் தோற்றுகிற நாமங்களும், இதைக்குறித்து வந்த வாபாசங்களுஞ் சசவிஷாண வந்தியாபுத்திர ககளை விந்தமித்தியா புருஷன்போலவே காலத்திரயத்திலுந் தனக்கில்லை. இதற்குச் சம்மதிவசனம்.

சுலோகம்.

పంచభూతమయంవిశ్వం మరీచిజలసన్నిభం। కస్యాహో
భూన్నమస్కారః యోహమేకోనిరంతరః॥ ౨౮

இதனதுபொருள்.

பஞ்சபூத ஸ்வரூபமான பிரபஞ்சங் கானற்சலத்துக்கொப்பானது. நானே யெங்கும் பரிபூரணமாயிருக்கிறேன். ஆருக்கு நமஸ்காரம் என்றும்.

### சுலோகம்.

మనోనబుద్ధిర్న శరీరమింద్రియం తన్మాత్రభూతాని న
భూతపంచకం। అహంకృతిశ్చాపి చిదీత్స్వరూపంతమిమాత్మ
మాత్మానముపైతి శాశ్వతమ్॥ ౧౫

### இதனதுப்பாருள்.

சிற்சொரூபமாயும் சர்வேஸ்வரனையும் சாஸ்வதமாயுமிருக்கின்ற ஆத்மஸ்வரூபத்தை மனதும் புத்தியும் அகங்காரமும் பஞ்சதன் மாத்திரையும் பஞ்சமகா பூதங்களும் சரீரமும் அடையமாட்டாது.

என்றும் அவதூத கீதைமுதலிய சாஸ்திரங்களில் தத்தாத்திரய யோகீஸ்வரர்முதலிய பெரியோர்கள் சொல்லியிருக்கிற படியா லிதுவே பிரமாண சித்தம்.

சூட்சுமப்பிரகரணம் சம்பூரணம்.



ஐந்தாவது

# காரணப் பிரகரணம்.



முற்பிரகரணத்திற் சங்கற்பரூபமான சூட்சும சரீரத்தையும் அதற் காதாரமான பஞ்சதன்மாத்திரைகளையும் நியதிகளைந் தவைகட் காதாரமான வஸித்தையை நியதிகளைதற்பொருட் டதன்மயமான காரண சரீர ஸ்வரூபம் நிரூபிக்கிறார்.

ஸ்லோகம்.

సచ్చిదానందస్వరూపే స్వాత్మన్యారోపితంవపుః। కా
రణం తత్స్వరూపంతు తావ త్తత్రనిరూప్యతే॥ ౨౬

இதனதுபொருள்.

சச்சிதானந்த ஸ்வரூபமான தன்னிடத்தி லாரோபிக்கப்பட்டது காரணசரீரம். அதினுடைய ஸ்வரூபமானது நிரூபிக்கப்படுகிறது.

காரண சரீரமாவது - பஞ்சதன் மாத்திரைகள் பிரத்தியேகம் பிரத்தியேகமாய் விபகரித்துப் பார்க்குமிடத்திற் சசவிஷாண வந்தியாபுத்திரககனரவிந்த மித்தியா புருஷன்போலவே யொன்று மில்லாமற் போனபடியினால் இதுவொன்று மில்லையென்றுதோற்றப்பட்டதே காரணசரீரம். இந்தக் காரணசரீரத்துக்கு அகங்காரதத்துவ மென்றும் அவித்தையென்றும் தமசென்றும் தூலசூட்சும சரீரங்களுக்குக் காரணமென்றும் ஒன்றுந் தெரியவில்லை என்றும் ஒன்றுங் காணவில்லை யென்றும் ஒன்றுந்தோணவில்லையென்றும் பிராந்தி என்று மிவைமுதலான பரியாய நாமங்களையுடைய திதுவே காரணசரீரம். இதற்குச் சம்மதிவாசனம்.

சுலோகம்.

అనాద్యవిద్యానిర్వాచ్యా కారణోపాధిరుచ్యతే । ఉ
పాధిత్రితయాదన్యమాత్మానమవధారయేత్ ॥ ௧௨

முதனூற்பொருள்.

அநாதியாயும் அநிர்வாச்சியமாயு மிருக்கின்றபடியாற் காரணோபாதியென்று சொல்லப்பட்டது.

இம்மூன்று பாதிகளுக்கும் அன்னியமா யாத்மாவை யறியவேண்டியது.

என்று ஆசாரியசுவாமிக ளாத்மபோதமென்கிறகிரந்தத்தி னிரூபித்திருக்கிற ரானபடியினு லிதுவே பிரமாணசித்தம்.

தன்னிடத்தி லத்தியஸ்தமாய்த் தோற்றுகிற விந்தக் காரணசரீரந்தானல்ல. அதெப்படித் தானல்லவென்றால், ஒன்றுமில்லையென்றால் ஒன்றுமில்லையென்றி தோற்றப்பட்ட விந்தக் காரண சரீரத்துக்கொன்றுமில்லை யென்றறிந்த ஞானமே தான். தன்னுலறியப்பட்ட விந்தக் காரணசரீரந்தன்னை யறியமாட்டாதாகையாற் சடம். இந்தக் காரணசரீரந்தானல்ல. இந்தக் காரணசரீர மகத்துவத்தினுலானது. அந்தக் காரணசரீரத்தினுடைய ஹானிவிருத்திகளினுல்வருகிற சுகதுக்கங்க டனக்கில்லை. இந்தக் காரணசரீரமே தானுனு லிந்தக் காரணசரீரம் போனுற் முன் போகவேண்டுமே? இந்தக் காரணசரீரம் போனுலுந் தான் போகவில்லையே? அதெப்படி போகவில்லையென்றுற் சமாதி யவஸ்தையிற் காரணசரீரம்போனுலுந் திரும்பவும் விருத்திவந்தபின்பு சுகமே யிருந்ததென்று

சொல்லுகிறு ஞனபடியினு லிந்தக் காரணசரீரந் தா னல்ல. இந்தக் காரணசரீரத்துக்குச் சாட்சியாயறிகிற ஞானமேதான்.

இந்தக் காரணசரீரத்துக்குச் சாட்சியாயறிகிற தானே சமஷ்டி காரணசரீரங்களிலேயும் அனுசூத மாயிருந் தறிகிற ஞானமே தான். தன்னாலறியப்பட்ட விந்தச் சமஷ்டிகாரணசரீரந் தன்னை யறியமாட்டா தாகையாற் சடம்.

இந்தச்சமஷ்டி காரணசரீரந் தானல்ல. இப்படித் தனக்கெதிராய்த் தோற்றுகிற சமஷ்டிவியஷ்டியான காரணசரீரத்தின்பேரி லத்தியஸ்தமாய்த் தோற்று கிற பிராஞ்ஞன் பாரமார்த்திகன் அவச்சின்னன் அவ்வியாகிருதனென்கிற அபிமானித்துவமும் சுழு த்தியவஸ்தையும் ஆனந்தமயகோசமும் தாமசகுண மும் ஆத்மானந்த போகமும் ஞானசத்தியும் உருத்தி ரமூர்த்தியும் இருதயஸ்தானமும் மகாரமாத்திரை யும் நான்குபோதகுரு நான்சந்துஷ்டன் நான்சாத் விகன் நான்இராசதன் நான் தாமசன் நான்சடன் நா னனந்தன் நா னஞ்ஞானி நான் மூடன் நான் சந் தன் நான் சண்டன் நான்மோகி நான்விவேகி நான்

பிராந்தன் நான் பாபிஷ்டன் நான் சோம்பன் நா னென்றுக்கு மாகாதவன் நானெறிந்துபோட்டவன் நான் கெட்டுப்போனவன் நான் வெறியன் நான்கை யாலாகாதவ னென்கிற பிராந்தி சங்கியாத்தியா சத் துவமும் இந்தக் காரணசரீரத்தைக்குறித்துச்சொல் லப்பட்ட சத்தசாஸ்திரம் யோகசாஸ்திரம் வேதாந் தசாஸ்திரமுதலிய சாஸ்திரங்களும் சமஷ்டி வியஷ்டி யென்கிற வத்தியாசங்களும் இவைமுதலான விந்தக் காரண பிரபஞ்சத்தின்பேரிற் றோற்றுகிற சகலவத்தி யாசங்களுஞ் சசவிஷாணவந்தியா புத்திர ககனா விந்த மித்தியாபுருஷன்போலவே காலத்திரயத்தி லுந் தனக்கில்லை. அதெப்படி. தனக்கில்லையென்று லதற்குத் திருஷ்டாந்த பூர்வகமாகச் சொல்லுகி றோம்.

அதென்னவென்றால், கடத்தைக் குறித்துவந்த கடாபாவங் கடத்தைத்தவிர வெப்படி யில்லையோ? அப்படியே பிரபஞ்சத்தைக் குறித்துவந்த பிரபஞ்ச பாவம் பிரபஞ்சத்தைத் தவிரவில்லை. ஆனபடியினால் மகத்துவத்தின்பேரி லத்தியஸ்தமாய்த் தோற்றுகிற விந்தக் காரணப்பிரபஞ்சமும் இதனிடத்தி லத்தி யஸ்தமாய்த் தோற்றுகிற பிராந்திசங்கிய நாமங்களும்

இதைக் குறித்துவந்த வாபாசங்களும் சசவிஷாண வந்தியாபுத்திர ககனாரவிந்த மித்தியாபுருஷன்போலவே சாஸ்திரயத்தினுந் தனக்கில்லை. சித்தம். இதற்குச் சாம்மதிவசனம்.

சுலோகம்.

దేహేంద్రియ మనోబుద్ధిః ప్రకృతిభ్యో విలక్షణమ్
తద్వృత్తిసాక్షిణంవిద్యాదాత్మానంరాజవత్సదా॥ ౨౭

இதனதுபொருள்.

தேகம் இந்திரியம் மனது புத்தி பிரகிருதி இவைகளுக்கு விலட்சணமாகியும் அவைகளின் விருத்திகளுக்குச் சாட்சியாகியும் இராசாவைப்போல வெங்குஞ் சம்பந்தமில்லாதவனாகியும் ஆத்மாவையறியவேண்டியது.

என்று ஆசாரியசுவாமிக ளாத்மபோத மென்கிற கிரந்தத்தி னிரூபித்திருக்கிறா ரானபடியினா லிதுவே பிரமாணசித்தம்.

காரணப்பிரகரணம் சம்பூர்ணம்.

ஆறாவது

# மகாகாரணப் பிரகரணம்.



முதற்பிரகரணத்தில் அவித்தாமயமான காரண சரீரத்தை நியதிகளைந்ததற்காதாரமான வித்தை யைநியதிகளைதற்பொருட் டதன்மயமான மஹாகா ரண சரீரஸ்வரூபம் நிரூபிக்கிறார்.

சுலோகம்.

సచ్చిదానందస్వరూపేస్వాత్మన్యారోపితంవపుః । మ
హాకారణమేతస్యస్వరూపంతునిరూప్యతే॥ ௧௯

இதனதுபொருள்.

சச்சிதானந்த ஸ்வரூபமான தன்னிடத்தி லாரோ பிக்கப்பட்டது மகா காரணசரீரம். அதனுடைய ஸ்வ ரூபமானது நிரூபிக்கப்படுகிறது.

அதெப்படி யென்னிற் றமோகுணப் பிரதான மான வகங்கார தத்துவ மென்கிற காரணசரீரம் போனபின்பு சுத்த சத்துவகுணப் பிரதானமான மகதத்துவமென்கிற் பிரத்தியகாத்துமா[illegible]கோ மகா

காரண சரீரமென்றுபேர். இந்தப் பிரத்தியகாத்து மாவென்கிற மகாகாரண சரீரத்துக்கே சித்தென்றும் சைதன்யமென்றும் போதமென்றும் கூடஸ்தனென்றும் ஞானமென்றும் சாட்சியென்றும் திருக்கென்றும் திரிசியானுவித்த மென்றும் இவைமுதலான பரியாயநாமங்களாம். இதற்குச் சம்மதிவசனம்.

சுலோகம்.

మాయోపాధిజగత్కర్తృసర్వజ్ఞత్వాదిలక్షణః । పా
రోక్షశబళస్సత్యాద్యాత్మక స్తత్పదాభిధః॥ 30

இதனதுபொருள்.

மாயோபாதிகனாயுஞ் சகத்துக்குக் காரணமாயுஞ் சர்வஞ்ஞத்துவம் முதலான இலட்சணங்களோடே கூடினவனாகியும் பாரோக்ஷமாயுஞ் சபதிமாயையாயுமிருக்கின்ற வீஸ்வரனே தத்பதார்த்தமாம்.

என்று ஆசாரிய சுவாமிகள்வாக்கால் யென்கிற கிரந்தத்தினிரூபித்திருக்கிறாரா லிதுவே பிரமாணசித்தம். பின்னுமிந்தப் பிரத்தியகாத்துமாவான சாட்சியே சாட்சியமான சகத்துரூபமாய்த் "தோற்றுகிறபடியினாலிந்தச் சகத்துரூப

மாய்த்தோற்றுகிற மகாகாரண சரீரமான பிரத்தியகாத்மாவுக்கே அகண்டாகார விருத்தியென்றும் ஆனந்தவிருத்தியென்றும் சம்பிரஞ்ஞாத சமாதியென்றும் சுத்தானுவித்தமென்றும் ஓங்காரமென்றும் பிரணவமென்றும் போதாங்குர மென்றும் தோணலென்றும் கிராகசத்தியென்றும் சிற்சத்தியென்றும்பிரதமாபாசமென்றும்பின்னும் அசங்கசச்சித்தானந்த சொற்பிரகாச நித்தசுத்தபுத்த நிஷ்மல நிராகார நிருபத்திரவ நிர்ச்சங்க நிர்விகார நிர்விகற்ப நிராலம்ப அகண்டானந்த பரிபூரணாநந்த நித்தியாநந்த நிர்விசேஷானந்த ஸ்வரூப பாவமென்கிற சத்தானுவித்த சவ்விகற்ப சமாதியென்றும் இவைமுதலாய் மகத்தான பரியாய நாமங்களாம். இதற்குச் சம்மதிவசனம்.

சுலோகம்.

ఏకం బ్రహ్మ చిదాకాశంస ర్వాత్మకమఖండితం। నిరం
తరంనిరాకార మితిభావయ రాఘవ॥ 3౧

இதனதுபொருள்.

சிதாகாச ஸ்வரூபமாகியும் சர்வ ஸ்வரூபமாகியும் அகண்டாகாரமாகியும் நிரந்தரமாகியும் நிராகாரமா

கியும் ஏகமாகியுமிருக்கின்ற பிரமத்தைப் பாவனம் பண்ணும்.

என்று வாசிட்ட ராமாயணமென்கிற கிரந்தத்தில் ஸ்ரீராமனைப் பார்த்து வசிட்ட ருபதேசம்பண்ணி யிருக்கிற ரானபடியினாலும், சுருதிகளிற் சொல்லப் பட்டிருக்கிறபடியினாலும், இதுவே பிரமாணசித்தம்.

இவைமுதலான வியஷ்டி-சமஷ்டி-அகண்டாகார விருத்திகளுடைய பரியாய நாமங்களோடே கூடி யிருக்கிறதே மூலப்பிரகிருதி யென்கிற மகாகாரண சரீரம். தன்னிடத்தி லைத்தியஸ்தமாய்த் தோற்றுகிற விந்த மகாகாரண சரீரந் தானல்ல. அதெப்படித்தா னல்லவென்றால், தூஷணிம் பூதாவத்தையி லிந்த மகா காரணசரீர மில்லாமற்போனாலுந் தானென்கிற பிரதீதியில்லாமற் றானிருக்கிறபடியினா லிந்த் மகா காரண சரீரந் தானல்ல. இந்த மகா காரணசரீரத் தின்பேரி லத்தியஸ்தமாய்த் தோற்றுகிற சர்வஞ்ஞ னென்றும் இக்ஷால வேதியென்றும் தானே சர்வ மென்றும் தன்னுடைய கற்பனையே சகத்தென்றுந் தன்னிடத்திற் சகத் துற்பத்தி ஸ்திதி சங்காரங்களா கிறதென்றும் தானே சகத்துக்குக் காரணமென்

றும் தானே சர்வசத்திவந்தனென்றும் தானேசர் வசத்திலு டனுகூதமா யிருக்கிறவனென்றும் தானே சுவர்க்க மத்தியபாதாள பிரமலோகாதி சகலலோ கங்களிலுமிருக்கிற பேர்களுடைய விர்த்தாந்தங்க ளெல்லாந் தெரிகிறவனென்றும் பின்னுந் தனக்கு த்துரியாவத்தை யென்றும் மூர்த்தன்ய ஸ்தான மென்றும் ஆனந்தபோக மென்றும் பிந்துவென் றும் இந்த மகா காரணசரீரத்தைக் குறித்துச்சொ ல்லப்பட்ட சத்தசாஸ்திரம் தர்க்கசாஸ்திரம் மீமா ம்ச சாஸ்திரம் யோகசாஸ்திரம் வேதாந்தசாஸ்திர மிவைமுதலிய சகல சாஸ்திரங்களும் இந்தச் சாஸ் திரங்களுக் கேதுவான சூக்குமை பைசந்தி மத் திமை வைகரி வாக்கென்கிறதும் இவைமுதலான சகல வத்தியாசங்களும் சசவிஷாண வந்தியாபுத்திர கனுரவிந்த மித்தியா புருஷன்போலவே காலத்திர யத்திலுந் தனக்கில்லை. இப்படித் தன்னிடத்தி லத் தியஸ்தமாய்த் தோற்றுகிற இந்தச் சாட்சித்துவ மென்கிற மகா காரணசரீரமே சாட்சிய மென்னப் பட்ட பிரபஞ்சத்தைக் குறித்துவந்தது. ஆனபடியி னுலிந்தச் சாட்சியமாயிருக்கப்பட்ட பிரபஞ்சங் கா லத்திரயத்திலுந் தன்னிடத்திலில்லை. ஆனபடியினு

லிங்கச்சாட்சியத்தைக் குறித்துவந்த சரட்சித்துவ மென்கிற மகா காரணசரீரமும். இதனிடத்தி லத்தியஸ்தமாய்த் தோற்றுகிற சர்வஞ்ஞத்துவாதி நாமங்களும் இதைக் குறித்துவந்த ஆபாசத்துவமும் சசவிஷாண வந்தியாபுத்திர ககனாரவிந்த மித்தியாபுருஷன்போலவே காலத்திரயத்திலுந் தனக்கில்லை. ஆனபடியினு லிங்கச்சாட்சி சாட்சியரகிதமாய் நினைப்புமறப்பில்லாமல் தியானத்திலேயு மில்லாமல் தூஷ்ணீம் பூதனாயிருக்கப்பட்ட சுகஸ்வரூபங் குருவாக்கியத்திற் றானென் றறிந்துநின்றே மூலப்பிரகிருதி ரகிதமான தன்னுடைய ஸ்வரூபம். இதற்குத் திருஷ்டாந்தம் ஆறுகடந்து பத்துப்பேர் போகச்சே அந்தப் பத்துப்பேர் கணக்காளியான வொருவன் மற்றவரொன்பதுபேரையு மெண்ணித் தன்னையெண்ணமற் பத்தாவான் றானாயிருந்துந் தன்னைப் பத்தவானென் றறியாமற் போனதே அதிர்ஷடானஞ்ஞானமான மூலப்பிரகிருதி ரூபத்தாக்கியத்தினுற் பத்தாவான்றானென்றறிந்துநின்றதே மூலப்பிரகிருதிரகிதமான தன்னுடைய ஸ்வரூபம். இதற்குச் சம்மதிவசனம்.

ஞானஞ் சுளுவுமாம். பளுவுமாம். அதெப்படியென்னில்நானென்றறிந்த அறிவுதானென்னல் சுளுவு.

அஞ்ஞா னன்றென்கிற மறதியே பளுவென்று லோககுருவா யிருக்கப்பட்ட வேதவியாசபகவான் ஸ்ரீராமஸ்தவராசமென்கிற கிரந்தத்தி னிரூபிக்கிறபடியினாலும், அறிந்தேனென்கிற நினைப்பும் அறியேனென்கிற மறப்பும் இவ்விரண்டுமின்றி யிருக்கிறதே நிரதிசயானந்த மென்று அவதூதகிதையில் தத்தாத்திரய யோகீஸ்வரர் நிருபித்திருக்கிறபடியினாலும், ஆசிரியர்-சீடன் இவர்களுடைய பிரசினைத் தரம் ஆலம்பழத்தைக் கொண்டுவா, ஸ்வாமி இதோ கொண்டுவந்தேன். அதைப்பிள, பிளந்தேன். அதிலென்னகண்டாய்? ஒன்றுங்காணவில்லை. பரமாணுக்களைக் கண்டேன். அப்பரமாணுக்களி லொன்றைப் பிள, பிளந்தேன். அதி லென்னகண்டாய்? ஒன்றுங் காணவில்லை. இப்படிக்கொத்த அணுவான விரையில் இலை-பணை-விழுது பொந்துகள் முதலான விகாரங்களோடுகூடிய ஆலமரமானது எப்படி அடங்கியிருந்ததோ? அப்படியே யுன்னிடத்தி னுமரூபமான பிரபஞ்சமுமடங்கி யிருக்கின்றது.

என்று சாந்தோக்கிய வுபநிடத்திற் சொல்லியிருக்கிறபடியினாலும், இதுவே பிரமாணசித்தம்.

மகா காரணப்பிரகரணஞ் சம்பூர்ணம்.



ஏழாவது

# நிசானந்தானுபூதிப்பிரகரணம்.

முற்பிரகரணத்திலே வித்தியாரூபமான மஹாகாரணசரீரத்தை நியதிகளோ நிலைகட் காதாரமான சச்சிதானந்த வொருமையினுள்ள நிரதிசயானந்த வனுபவ மாம்பொருட் டகுற் கங்கமான நிசானந்தானுபூதிப் பிரகரணம் நிரூபிக்கிறார்.

சுலோகம்.

సచ్చిదానందస్వరూపే స్వాత్మామృత సరస్వతి । సతీ
ముక్తిర్వ్యాప్తత్వాత్స్వరూపం నిరూప్యతే॥ ௩௭

இதனதுபொருள்.

சச்சிதானந்த ஸ்வரூபமான ஆத்மாவென்னும் அமிர்தசாகரத்தில், நித்திய சாஸ்வதமான முத்தியிருக்கிறது அதினுடைய ஸ்வரூபமானது நிரூபிக்கப்படுகிறது.

அஃதாவது, மூலப்பிரகிருதி ரகிதமான தன்னுடையஸ்வரூபவர்னணி...ப்படியென்னில்,

சத்தே சுயந்தோன்றுகிறபடியினாற் சித்தாச்சு. சித்தேகமயமாயிருக்கிறபடியாற் சத்தாச்சு. இதற்கிரண்டாம்வஸ்து வில்லாதபடியினு லானந்தமாச்சு. ஆகச்சே சச்சிதானந்த ஸ்வரூபமாய் அகண்டானந்த ஸ்வரூபமாய் பரிபூரணானந்த ஸ்வரூபமாய் நித்தியானந்த ஸ்வரூபமாய் நிர்விசேஷானந்த ஸ்வரூபமாய் நிருபநிருபத்திரவ நின்மல நிரவயவ நிரந்தக நித்திய நிராகார நித்த நிஷ்கர்ம நிச்சங்க நிரவிநிராஸ்வ ரூபமாய் நிர்க்குண நிஷ்கிரிய நிற்விகற்ப நிரஞ்சன நிர்லட்சிய நிராலம்ப நிரதிசயானந்தஸ்வரூபமாய் நிரீசநிர்லேப வாணநிர்ச்சிந்திய நிர்வசன நிரூபானந்தஸ்வரூபமாய் நிர்வேத்திய நிச்சல நிசேடிநிர்ச்சத்தநிர்ச்சீவ நிர்ச்சலானந்த ஸ்வரூபமாய் நிர்ப்பின்ன நிர்ப்போத நிர்நாம நிர்வியாச்சிய நிர்ப்பாவ நிஷ்பிரபஞ்ச ஸ்வரூபமாய் அச்சேத்திய அச்சுலேந்திய அசோசிஷ்ய அதாகிய அகிராகிய ஆதியந்த ரகிதானந்த ஸ்வரூபமாய் அக்ஷர அமல அப்பிரமேய அநாசிரிய ஆனந்த கந்தஸ்வ ரூபமாய் அநாதார அமிர்த அவிதாக்கிய அநாமய அதிரிசிய அத்துவிதானந்த ஸ்வரூபமாய் அபாகிய அன்னிய அபாசிய அநிர்வாச்சிய அதிந்திரிய அபோத்திய அரூ

ணிய அக்குரோத அபரோக்ஷாநந்த ஸ்வரூபமாய் இவை முதலான தன் ஸ்வரூபத்தினுடையவர்னணீயநாமங்களாம். இதற்குச் சம்மதிவசனம்.

சுலோகம்.

నిర్గుణో నిష్క్రియో నిత్యో నిర్వికల్పో నిరంజనః। నిర్వికారో నిరాకారో నిత్యముక్తోఽస్మి నిర్మలః॥ 3=

இதனதுபோருள்.

ஒரு குணமுமில்லாதவனாய் ஒரு கர்மமுமில்லாதவனாய் ஒரு விகற்பமுமில்லாதவனாய் ஒரு மானமுமில்லாதவனாய் ஒரு விகாரமுமில்லாதவனாய் ஒருருவமுமில்லாதவனாய் நித்தியமுத்தனா யிருக்கிறேன்.

இப்படி ஆசாரியசுவாமிக ளாத்மபோதமென்கிற கிரந்தத்தினிரூபித்திருக்கிற ரானபடியினாலும், வேதசாஸ்திரங்களிற் சொல்லியிருக்கிறபடியினாலும், இது வேபிரமாண சித்தம்.

இந்த ஸ்வரூபத்தினுடைய வர்னணீயநாமங்கள் பிரபஞ்சத்தைக்குறித்து வந்ததேயல்லாமல் வேறல்ல. அதெப்படி யென்னில், அசத்தைக் குறித்துச் சத்தென்றும். சடத்தைக் குறித்துச் சித்தென்றும் துக்

கத்தைக் குறித்து ஆனந்தமென்றும் சகுணத்தைக் குறித்து நிர்குணமென்றும் ஆபரணத்தைக் குறித்து நிராபரணமென்றும் காரணத்தைக்குறித்து நிர்க்காரணமென்றும் விஷயானந்தத்தைக் குறித்து நிர்விஷயானந்தமென்றும் பேதத்தைக்குறித்து அபேதமென்றும் பரோக்ஷத்தைக் குறித்து அபரோக்ஷ மென்றும் தொய்தத்தைக்குறித்து அத்தொய்தமென்றும் விகாரத்தைக் குறித்து நிர்விகாரமென்றும் அவலம்பத்தைக் குறித்து நிராலம்பமென்றும் சங்கத்தைக் குறித்து நிர்ச்சங்கமென்றும் அப்பிரகாசத்தைக் குறித்துப் பிரகாசமென்றும் கண்டத்தைக் குறித்து அகண்டமென்றும் நாமத்தைக் குறித்து நிர்நாமமென்றும் சூனியத்தைக் குறித்துப் பூரணமென்றும் வாக்கியத்தைக்குறித்து அநிர்வாச்சியமென்றும் சத்தத்தைக் குறித்து நிர்ச்சத்த மென்றும் அஞ்சனத்தைக் குறித்து நிரஞ்சன மென்றும் வேத்தியத்தைக்குறித்து நிர்வேத்திய மென்றும் சலனத்தைக் குறித்துநிர்ச்சலனமென்றும்நிரமிர்தத்தைக்குறித்து அமிர்தமென்றும் ஆதியந்த சகிதத்தைக் குறித்து ஆதியந்த ரகிதமென்றும் பிரபஞ்சத்தைக் குறித்து நிஷ்ப்ரபஞ்சமென்றும் சித்தவிரோதத்தைக் குறித்

துயோகமென்றும்,இலட்சியத்தைக்குறித்துநிர்லட்சி
யமென்றும் பெயர்களாம். பின்னுஞ் சர்வம் பிரமமெ
ன்றுஞ் சர்வஞ் சூனியமென்றும், இவைமுதலான
தன் ஸ்வரூபத்தினுடைய வர்ணனீய நாமங்கள் பிர
பஞ்சத்தைக்குறித்து அததியாசமாய்த்தோற்றிற்றே
யல்லாமற் சுதாவிந்தநாமங்கள் சசவிஷாண வந்தியா
புத்திர ககனாரவிந்தமித்தியா புருஷன்போலவேகால
த்திரயத்திலுந் தனக்கில்லை. ஆனபடியினால் பேதா
பேதரகிதமாய்ப் புண்ணியா புண்ணிய ரகிதமாய்த்
தொய்தாத்தொய்தரகிதமாய்ப் பாவாபாவ ரகிதமாய்
ஞானஞ்ஞான ரகிதமாய்க் காரிய காரண ரகிதமாய்,
மாயாமோகரகிதமாய்ப்பந்த மோக்ஷரகிதமாய், சுகது
க்கரகிதமாய், காமியாகாமியரகிதமாய், கம்மியா கம்
மியரகிதமாய், சநநமரணரகிதமாய், விருத்திக்ஷரகி
தமாய், உதயாஸ்தமானரகிதமாய், திவாராத்திரி ரகி
தமாய், இவைமுதலாயிருக்கப்பட்ட தொந்த ரகித
மாய்த் துஷ்ணீம் பூதனாயிருக்கப்பட்ட தன்னுடைய
ஸ்வரூபத்தில் பிரதிஷ்டானஞ்ஞானமென்கிற ஆவர
ணமான மூலப்பிரகிருதியும் விக்ஷேபகாரணமான மக
தத்துவம் அகங்கார தத்துவம் பஞ்சதந்மாத்திரை

சூட்சுமதூலாதிப் பிரபஞ்ச மெப்படித் தோற்றுகிற தென்றால், திருஷ்டாந்த பூர்வகமாய்நிரூபிக்கிறோம்.

அந்தத் திருஷ்டாந்த மென்னவென்றால், மூலப்பிரகிருதியென்கிற மித்யாபுருஷனிடத்தில் அகங்கார தத்துவமென்கிற இல்லாத சித்திரக் கோற்கையிற் பிடித்துக்கொண்டு பஞ்சதன்மாத்திரை யென்கிற இல்லாத பஞ்சவன்னங்களினாற் றூலசூட்சமமென்கிற பொய்யான சித்திரத்தைச் சூனியமென்கிற வாகாசத்திலெழுதினாற்போல விருக்கிறதென்று வசிட்டபகவான் வாசிட்டமென்கிற கிரந்தத்தி னிரூபித்திருக்கிறா ரானபடியினா லிந்தத் தூஷ்ணீம் பூதனாயிருக்கப்பட்ட தன்னுடைய ஸ்வரூபத்தில் அதிஷ்டானஞ்ஞானமான ஆவரண மென்கிற மூலப் பிரகிருதியும் விக்ஷேபகாரணமான மகத்துவ மகங்கார தத்துவமும் பஞ்சதன்மாத்திரை சூட்சுமதூலப் பிரபஞ்சமும் சாக்கிர சொப்பனசுழுத்தி துரியாவஸ்தைகளும் விசுவதை சதபிராஞ்ஞா பிரத்தியக்குசைதன்னியமும், விராட்டு இரணியகர்ப்ப அவ்வியாகிருதசருமசாட்சித்துவம் இராசததாமசசத்துவமான சுத்தசத்துவமும் சுத்தசத்துவகுணங்களும் யுத்தபரியுத்த ஆனந்த ஆத்மானந்த போகங்களும், சிற்சத்தி

பராசத்தி ஆதிசத்தி இச்சாசத்தி கிரியாசத்திகளும், பிரமா விஷ்ணு ருத்திரன் மஹேஸ்வர சதாசிவ மூர்த்திகளும், நேத்திரம் கண்டம் இருதயம் மூர்த்தன்னிய ஸ்தானங்களும், அகார உகார மகார பிந்துமாத்திரைகளும், இதைக்குறித்துவந்த அத்யாச நாமங்களும், இதைக்குறித்துச் சொல்லப்பட்ட சாஸ்திரங்களும், இதைக்குறித்து வந்த ஆபாசங்களும் இதைக்குறித்துவந்த ஸ்வரூபவர்ணனீயநாமங்களும், இந்த ஸ்வரூபவர்ணனீயமாய்ப் பிரதிபாதிக்கிற மகாவாக்கியங்களையுபதேசம்பண்ணிக்கொண்டசீடர்களும், இந்தச் சீடரைக்குறித் துபதேசம் பண்ணின சற்குருக்களும், இந்தச் சற்குருக்களுடைய வுபதேசங்களும் இந்தவுபதேசத்தினால்வந்தசிரவணமனனநியதிகளும் சர்மபந்தி வைராக்கியம் யோகத் தியானங்களும், சாம்பவிமுத்திரை கேசரிமுத்திரை அமனஸ்க முத்திரை மவுனமுத்திரைகளும், இந்தப் பிரபஞ்சம் அஞ்ஞானத்தினாற் றோற்றிற்றென்றும், ஞானத்தினாலில்லாமற்போயிற்றென்றும், யோகத்தினாற் றன்னைத்தான் பார்க்கவேண்டுமென்றும், ஞானத்தினாற் றன்னைத்தானறியவேண்டுமென்றும், இப்போ தறிந்துகொண்டேனென்றும், இவைமுதலான சகல சங்கற்

நிவிர்த்தியெங்கே? முத்தியெங்கே? பந்தமெங்கே என்று அஷ்டவக்கிர கீதையி னிரூபித்திருக்கிறபடியினாலும்.

சுலோகம்.

అమనస్త్వాన్న మేదుఃఖరాగ ద్వేష భయాదయః। అప్రాణస్య మనాశ్శుభ్రొ ఇత్యాదిశ్రుతిశాసనాత్ ॥ 3౮॥

இதனதுபொருள்.

அப்பிராணனென்றும், அமனஸ்தனென்றும், சுப்பிரனென்றும், வேதஞ்சொல்லுகிறபடியே எனக்குமன் தில்லாத படியினால் துக்கமும் இராகமும்துவேஷமும் பயமுங்கிடையாதென்று ஆத்மபோதமென்கிற கிரந்தத்தில் ஆசாரியசுவாமிகள் நிரூபிக்கிறபடியினாலும்.

சுலோகம்.

ప్రశాంతవృత్తికంచిత్తంపరమానందదీపకం। అసంప్రజ్ఞాతనామాయంసమాధిర్యోగినాంప్రియః॥ 3౯

இதனதுபொருள்.

சகல சங்கற்பங்களும் உபசாந்தியடைந்து பரமானந்த மேலிட்டால் அசம்பிரஞ்ஞாத சமாதியென்றுபேர்.

சுலோகம்.

స్వానుభూతి రసావేశాద్దృశ్యశబ్దావనపేక్షితం-నిర్వి
కల్పసమాధిస్స్యాన్నివాతస్థదీపవత్॥ ౪౦

இதனதுபொருள்.

சுவானுபதமென்கிற அவமிர்த ரசத்தினுலே சத்தால்திரிசியத்தை விருமபாதிருக்கின் நிவாதஸ்தலத்தீபம்போல விருப்பதே நிச்சலமான நிர்விகற்ப சமாதி என்று வித்யாரண்ய சுவாமிகள் நிரூபித்திருக்கிறபடியினுலும்.

சுலோகம்.

సంశాంతసర్వసంకల్పాయాశిలావదవస్థితిః । జాడ్యని
ద్రావినిర్ముక్తా సాస్వరూపస్థితిఃపరా॥ ౪౧

இதனதுபொருள்.

சகல சங்கற்பங்களும் உபசாந்தமாய்ச் சாட்டிய நித்திரை நீங்கச் சிலையைப்போல் நிச்சலமாயிருப்பது ...த்தமான ஸ்வரூபஸ்திதியென்று விசிட்ட ...ன் வாசிட்டமென்கிற கிரந்தத்தினிரூபித்திருக்கிறபடியினுலும் வேதாந்தானுபவமறிந்த பெரியோர்களுக்குசு தாகினுமுண்டானலல்லவா? இல்லையெனச் சொல்ல வேண்டுமென்று தத்தாத்திரயயோகீஸ்வரர் பூரணனந்தபோதமென்கிற கிரந்தத்தினிரூபித்திருக்கிறபடியினுலு